ஸ்ரீவத்ஸத்தின் அம்சமாய் ஒருவர் ஓர் அந்தணனது கழனியிலே நெற்பயிர்க் கதிரில் அவதரித்தார்.

பிறவாது பிறந்த அத்தெய்வக் குழந்தையை அவ்வூரிற் பஞ்சமசாதியிற் பாணர் குலத்தில் பிறந்தானொருவன் பார்த்து நல்வினைப் பயனென்று மகிழ்ந்து எடுத்துக்கொண்டுபோய், மலடு தீர்ந்து, மருவிய காதல் மனையாளும் தானுமாக, பசுவின்பால் முதலிய பரிசுத்த ஆஹாரங்களையே கொடுத்துப் போஷித்து வந்தான். அங்ஙனம் வளர்ந்த இவர் திருமாலருளால் தோன்றியவ ராதலால், இயற்கையிலேயே உலகப்பற்றற்று எம்பெருமானுடைய திருவடித் தாமரைகட்குத் தம் மனத்தை மதுகரமாக்கியதுமன்றி, தாம் புகுந்த குலத்துக்கேற்ற யாழ்ப்பாடலிலும் தேர்ச்சிபெற்று அதனால் பாணர் என்றே பேர் கூறப்பட்டு, நாரதபகவான்போல ஞானவைராக்யங்களோடு ஸங்கீத ஸாமர்த்தியமும் முதிர்ந்துநின்றார். இவ்வாறிருக்கையில் விஷ்வக்ஸேநர் ரஹஸ்யமாக எழுந்தருளி இவர்க்குத் திருவிலச்சினை ஸாதித்துச் சென்றார்.

## ஆழ்வார் யாழிசைபாடிப் போதுபோக்குதல்

அதனால் மஹாபாகவதோத்தமராகிய இவர் ரங்கநாதனுக்குப் பாடல் திருத்தொண்டு செய்ய உத்தேசித்துப் புறப்பட்டு தாம் தாழ்ந்த குலத்தில் வளர்ந்தவ ராதலால் உபயகாவேரி மத்தியிலுள்ள ஸ்ரீரங்க திவ்யக்ஷேத்திரத்தில் அடியிடுதலுக் குத் துணியாமல் தென் திருக்காவேரியின் தென்கரையில் திருமுகத்துறைக் கெதிரிலே யாழுங்கையுமாக நின்றுகொண்டு நம்பெருமானைத் திசை நோக்கித் தொழுது அப்பெருமான் விஷயமாக அநேக திவ்யகீர்த்தனங்களை, கண்டமும் கருவியுமொக்க, கேட்பவர் செவியும் மனமும் குளிர, எம்பெருமான் திருவுள்ள முகக்க, கிந்நரகந்தர் வாதியர் வியப்புறப் பாடினார்.

முன்பு திருக்குறுங்குடியில் நாடோறும் பகவத் விஷயமான யாழிசையைப் பாடிக் கைசிகமென்னும் பண்ணின் பயனால் தன்னைச் சரணமடைந்த ஒரு ப்ரஹ்ம ரக்ஷஸ்ஸையும் தீவினை தீர்த்து நற்கதி அடைவித்துத் தாமும் பிறவிப் பெருங்கடல் கடந்த **'நம்பாடுவான்'** என்ற ஜாதிசண்டாளன்போலவே இவ்விழிகுலத்த வரும் பக்தியாற் பரவசப்பட்டு நெஞ்சம் நெக்குருகக் கண்கள் ஆநந்த வருவி சொரிய உடல் மயிர்க்கூச்செறிய நாடோறும் வைகறையிலே வந்து இசைபாடா நிற்கையில் ஒருநாள், திருவரங்கச் செல்வனுக்குத் தீர்த்த கைங்கர்யம் செய்கிற லோகஸாரங்கரென்னும் அந்தணர் தலைவர் தீர்த்தங் கொண்டு வருவதற்குப் பொற்குடத்தை யெடுத்துக்கொண்டு பொன்னித் துறையையடைகையில் அருகிலுள்ள இந்தப் பாணரைப்பார்த்து அருவருத்து 'எட்டச்செல்' என்று பலமுறைபணிக்கவும் இவர் இவ்வுலகத் தொடர்பை மறந்திருந்ததனால் அம் மொழியைச் செவியுறாமல் வாளா நின்றிட்டார். இவர்மீது பலர் கற்களை வீசியெறிய அவ்வன்சிலைகள் இவருடைய மெல்லுடல்மேல் நன்கு பட்டிடவும், இவர் பக்தி வயப்பட்டதனால் சிறிதும் ஸ்பர்சவுணர்வின்றிச் சலியாதிருந்தார். அதுகண்டு அனைவரும் அஞ்சி அகன்றனர்.

## அரங்கன் திருமேனியில் விபரீதமுண்டாதல்

அப்பொழுது இவரது உடம்பிலும் உள்ளத்திலும் ஈஷத்தும் வருத்தம் காணப்படவில்லையாயினும் பக்தர்களது அந்தரங்கத்தில் அமர்ந்திருக்கின்ற அரங்கநாதனது திருவுள்ளம் மிகக் கலங்கி, திருநெற்றியும் இரத்தப் பெருக்குற்றது;

அதனை நோக்கி அர்ச்சகர் மிகவும் பயப்பட்டுக் கோயிலதிகாரிகளுக்கு அறிவிக்க, அவர்களும் இவ்வுற்பாதச் செய்தியை அரசனுக்குப் போகவிட, மந்திரிகளோடு பலவிதமாக ஆராய்ந்தும் அரசன் காரணங்காணாது கவன்று ஸ்வாமி திருவடியிலே பாரத்தை ஸவத்திட்டான். அதற்கு முன்னே ஒருநாள், பிராட்டி பெருமாளை நோக்கி 'வெகுகாலமாக நம்மை அநவரத பாவனை பண்ணி வருகிற நம்பாணன் புறம்பே நிற்கப் பார்த்திருக்கலாமோ?' என்று விண்ணப்பஞ் செய்ததற்கு, எம்பெருமான், விரைவிலே அவரை அருகில் அழைத்துக்கொள்வதாக வாக்களித் திருந்தனன்.

### அரங்கனல் நியமிக்கப்பட்ட லோகஸாரங்க முனிவர் பாணரை வேண்டுதல்

அநந்தரம் அவ்வாறே பிராட்டியின் இஷ்டத்தை நிறைவேற்றவும் பாணரைப் பெருமைப்படுத்தவும் திருவுள்ளங்கொண்டு திருவரங்கேசன் லோக ஸாரங்கமஹா முனிவரை நோக்கி 'நமக்கு நல்லன்பரான பாண் பெருமாளை இழிவாக நினையாமல் நீர் சென்று தோள்களில் எழுந்தருளப் பண்ணிவாரும்' என்று நியமிக்க, அவர் அப்படியே செய்து தாம் பேறுபெறக்கருதி அச்செய்தியை அத்திருப்பதியிலுள்ளார் யாவர்க்குந் தெரிவித்து, அவர்களும் உடன்வரச் சென்று திருமுகத்துறையிலே தீர்த்தமாடித் தௌதவஸ்திரமுடுத்துப் பன்னிரண்டு திருமண் காப்புகளணிந்து காலைக்கடன் கழித்துக் கரையேறிப் பாணர் வழக்கமாக நிற்கின்ற விடத்துச் சென்று அவர் திருவடிகளிலே ஸாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு 'தேவரீரைத் தம்மிடத்துக்கு எழுந்தருளப் பண்ணுவித்துக்கொண்டு வரவேண்டு மென்று நம்பெருமாள் அடியேனுக்குக் கட்டளையிட்டருளினர்' என்று சொல்ல; பாணர்தலைவர், 'நீசனான அடியேன் திருவரங்கப் பெருநகரை மிதித்திடுவனோ?' என்று தம் சாதியிழிவைச் சொல்லி மறுத்திட்டனர்.

### ஆழ்வார் அடியார்க்கு ஆட்பட்டு முநிவாஹனராகிக் கோயிலுள்ளே புகுதல்

அப்பால் முனிவர் 'தேவரீர் மிதித்திடவேண்டா: பெருமாள் பெரியதிருவடி யின் திருத்தோளில் எழுந்தருளுதல் போலத் தேவரீர் அடியேனது தோளில் ஏறியருளும்' என்று பிரார்த்திக்க அதுகேட்டவளவிலே பாணர் அளவிறந்த அச்சங்கொண்டு அதனால் உடல் நடுநடுங்கிச் சொற்குழறி 'மஹாபரிசுத்த மூர்த்தி யான தேவரீர் அடியேன் திறத்து இங்ஙனங் கூறவொண்ணாது; பாகவதர் பாதத் திலே தலையை வணங்குவதற்கு உரிய யானோ இக்கொடுந்தொழில் புரிவேன்? இது செய்து பாகவதாபசாரப்படுதலினும் எரிவாய் நரகத்து அழுந்துவது நலமன்றோ? என்று நைச்சிய வார்த்தைகள் கூறினர். அதன்பின் முனிவர் பகவந் நியமனத்தை விண்ணப்பஞ்செய்து 'அது அதிக்ரமிப்பதற்கு உரியதன்று' என்று பகர, பாணர் பரதந்திரராய் நின்றுவிட்டார். பின்னர் முனிவரர் பாணநாதரைத் தோளிலேற்றிக்கொண்டு முக்தனைப்போமவனை ஆதிவாஹிகர் எழுந்தருள்வித்துக் கொண்டு திருமாமணி மண்டபத்துக்குச் செல்லுமாறுபோலச் சென்று ரங்கநாதனது திருமுன்பே இறக்கிவிட்டனர்.

### ஆழ்வார் அமலனாதிபிரானருளிச்செய்து அரங்கன் திருமேனியில் அந்தர்ப்பவித்தல்

உடனே முநிவாஹநரான பாணர் *இருளகற்றுமெறிகதிரோன் மண்டலத் தூடேற்றி வைத்தேணி வாங்கி அருள்கொடுத்திட்டடியவரை ஆட்கொள்வானை அணியரங்கனது திவ்யமங்கள விக்ரஹத்தைப் பாதாதிகேசம் நேத்திராநந்தமாகச்

சேவித்து அதில் ஆழ்ந்து அதன் அழகை அநுபவித்து அவ்வநுபவாதிசயத்தைப் பின்புள்ளார்க்கும் விசதமாக்குதற் பொருட்டு **அமலனாதிபிரான்** என்ற திவ்யப்ரபந்தத்தைத் திருவாய்மலர்ந்தருளி அதன் இறுதியில் "என்னமுதினைக் **கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே.**" என்று தமது துணிபை வெளியிட்டு உலகத்தாரை வாழ்வித்து மிகவும் உகப்போடு நிற்கையில், பெரியபெருமாள் அத்திருமேனியோடு அவரை அங்கீகரித்தருளத் திருப்பாணாழ்வார் அனைவருங் காண அப்பிரானது திருவடிகளிலே அந்தர்ப்பவித்து, காய்ந்த இரும்பு உண்ட நீராயினர். கோபாலன் குழலிசையாற் கோக்களை மகிழ்வித்ததுபோல அக்கோவிந்தனை யாழிசையால் மகிழ்வித்த இவ்வாழ்வார் இவ்வுலகில் வாழ்ந்திருந்தது ஐம்பது வருஷகாலமென்பர். லோகஸாரங்கர் முதலிய பலர் இவ்வாழ்வாரை ஆச்ரயித்து நற்கதி பெற்றனர். ... *

**திருப்பாணாழ்வார் வைபவம் முற்றிற்று.**

---

ஸ்ரீ

# திருமங்கையாழ்வார் வைபவம்

### அவதாரமும் நாமகரணமும்

சோழமண்டலத்திலே திருமங்கையென்று ஒரு நாடு உண்டு. அதில் திருவாலி திருநகரியென்கிற திவ்யதேசத்தின் ஸமீபத்திலுள்ள திருக்குறையலூரிலே நான்காம் வருணத்தில் கள்ளக்குடியில், சோழராஜனுக்குச் சேனைத்தலைவனுகவுள்ள ஒருவனது குமாரராய் ஒருத்தர் கார்த்திகை மாதத்தில் கிருத்திகா நக்ஷத்திரத்திலே அவதரித்தார். இப்படி அவதரித்த அவர் நீலநிறமுடையராயிருந்தது பற்றி இவர்க்குத் தந்தை நீலனென்று நாமகரணஞ் செய்தார். [இவர்க்குத் திருமங்கையாழ்வார், பரகாலன், கலியன், கலிகன்றி முதலிய திருநாமங்களுமுள.]

இவர் தமது குடிக்கு ஏற்ப இளமையிலே ஆயுதப் பயிற்சியில் தேர்ச்சி பெற்றுச் சோழராஜனை யடுத்துச் சேனாபதி உத்யோகத்தில் அமர்ந்து கொற்றவனுக்குக் கொடியவரோடு கடும்போர் நேருங்காலங்களுள் படைகளோடு முன் சென்று பராக்கிரமத்தாற் பகைவென்று பரகாலனென்று ப்ரஸித்திபெற்றார். இவருடைய இப்படிப்பட்ட ஒப்பற்ற பராக்கிரமத்தை யுணர்ந்த கொற்றவன் இவரை அத்திருமங்கை நாட்டுக்கு அரசராக்கி முடிசூட்டினான். இவ்வாறு குறுநிலத் தலைமை பூண்ட திருமங்கை மன்னன் அரசாங்க காரியத்தைக் குறைவின்றி நடத்திப் புகழ் பெற்று இசை நாடகங்களில் பிரியமுடையராய் எப்பொழுதும் பல இளமங்கையர் இன்னிசை பாடக் கேட்பதையும் நன்னடம் பயிலக் காண்பதையுமே பொழுதுபோக்காகக் கொண்டிருந்தார்.

இப்படியிருக்கையில் அந்நாட்டில் அண்ணன் கோயில் என்று வழங்குகின்ற திருவெள்ளக்குளமென்னுந் திருப்பதியில் மிகச் சிறந்ததொரு தாமரைப் பொய்கையில் தேவலோகத்து அப்ஸரஸ் ஸ்த்ரீகள் பலர் வந்து ஜலக்ரீடை செய்து செல்ல, அவர்களுள் திருமாமகளென்பாள் தன் இச்சையால் தெய்வவடிவத்தைவிட்டு மானுடவடிவங்கொண்டு தனியே குமுதமலர் கொய்து நின்றாள். அங்கு அநுஷ்டானத்திற்காக வந்த வைஷ்ணவ வைத்யன் அவளைக் கண்டு செய்தி விசாரிக்க,

அவள் 'என்னோடு கூடவந்த மாதர்கள் என்னைவிட்டுப் போய்விட்டார்கள். தனியிருந்து அலைகின்ற என்னை நீர் பாதுகாத்தருளவேணும்' என்று வேண்டினாள். மலடனான அம்மருத்துவன் மகிழ்ச்சியோடு அதற்கு உடன்பட்டு அம்மகளைத் தன் மாளிகைக்கு அழைத்துப்போய் மனையாள் வசம் ஒப்பித்து, குமுதமலர் கொண்டு நின்றது காரணமாகக் குமுதவல்லியென்று அப்பெண்ணுக்கு நாமமிட்டு வளர்த்து வந்தான். வருகையில் அக்கன்னிகைக்கு விவாஹத்துக்குரிய பிராயம் வந்த வளவிலே அவளை வளர்க்கிற அந்த வைத்தியனுக்கு 'மஹா குணவதியான இப் பெண்ணுக்கு ஏற்ற கணவன் உலகத்திலுளனோ' என்ற கவலையும் உடன் வந்தது. அப்பொழுது அவளுடைய ரூபலாவண்ய ஸௌந்தரியங்களையும் குணாதிசயங்களை யும் சாரர்கள் திருமங்கை மன்னனிடம் கொண்டாடிக்கூற, உடனே அவர் அவளழகைப் பார்ப்பதற்கு ஆசை கொண்டு ராஜ்யகாரியங்களை இருந்தது இருந்த படியே விட்டுத் திருநாங்கூரைச் சார்ந்ததான அத்திருவெள்ளக்குளத்துக்கு வந்து அந்த வைத்தியனிருக்கும் வீட்டிலே புக்கு அவனோடு ஸம்பாஷணை செய்து கொண்டிருக்கையில் அக்கன்னிகை கண்ணெதிரிற் படக்கண்டு வியந்து காதல் விஞ்சி அவள் வரலாற்றை வினவி அதைத் தந்தையார் வாயில் அறிந்த வளவில் 'இவளை எனக்குத் தாரைவார்த்துக் கொடுக்க வேணும்' என்று அவரை வணங்கிக் கேட்டார். வஸ்திர பூஷணம் முதலியவற்றையும் மிகுதியாக முன் வைத்தார். இவர் இங்ஙனம் விரும்பிக் கேட்டதற்குத் தந்தை தாயர் இசைந்து அப்படியே கன்னிகாதானஞ் செய்யவிருக்கையில் குமுதவல்லி குறுக்கிட்டு "திருவிலச்சினை திருமண்காப்பு முதலிய பஞ்ச ஸம்ஸ்காரமுடைய ஒரு வைஷ்ணவர்க்கேயன்றிப் பிறர்க்கு வாழ்க்கைப்படமாட்டேன்" என்று தன் உறுதியைத் தெரிவித்தாள்.

அதுகேட்ட திருமங்கை மன்னன் உடனே திருநறையூர்க்குச் சென்று அங்கு எழுந்தருளியுள்ள நம்பி என்னு மெம்பெருமானுடைய திருமுன்பே நின்று பிரார்த்தித்து அப்பிரானிடத்தில் திருவிலச்சினை பெற்றுப் பன்னிரண்டு திருமண் காப்புகளும் சாத்திக்கொண்டு விவாஹார்த்தமாக விரைவில் வந்து சேரக் கண்டு மீண்டும் குமுதவல்லி "நீர் ஓராண்டளவும் நித்தியமாக ஆயிரத்தெட்டு ஸ்ரீ வைஷ்ணவர்களை அமுது செய்வித்து அவர்களுடைய ஸ்ரீபாத தீர்த்தத்தையும் போனகஞ்செய்த சேஷத்தையும் உட்கொண்டாலன்றி உம்மை நான் பாணிக் கிரஹணஞ் செய்துகொள்ளமாட்டேன்" என்ன, அவளிடத்தில் கொண்ட ஆசையின் கனத்தால் அவர் இவ்வரிய விரதத்தைச் செய்து முடிப் பதற்கும் உடன்பட்டு அங்ஙனமே செய்வதாகச் சபதஞ் செய்து கொடுக்க, அதன் பின் இருவர்க்கும் திருமணம் நடைபெற்றது.

பின்பு திருமங்கை மன்னன் பகவானது ஆராதனத்திற் காட்டிலும் பரம பாவநமான பாகவதாராதனத்தைச் செய்து கொண்டும் தம் அரசனுக்குச் செலுத்த வேண்டிய பகுதிப் பொருளு முட்படச் செல்வ முழுதையுஞ் செலவிட்டுவர அச் செய்தியைச் சிலர் சொல்லக் கேட்ட கொற்றவன் கோபங்கொண்டு இவர் பக்கல் திறை வாங்கி வருவதற்காகத் தன் சேவகரை அனுப்பினான். அவர்கள் வந்து கேட்டதற்கு இவர் காலை பகல் மாலை இரவு நாளை பின்னிட்டு என்பதாகச் சில தவணைகள் சொல்லிக்கொண்டு கால விளம்பஞ் செய்து வந்தார்.

### பரகாலனுக்குப் பேரருளாளன் நிதி காட்டுதல்

பின்பு அச்சேவகர்கள் கடுமையாக நிர்ப்பந்தஞ் செய்யவே, நீலர் வெகுண்டு அவர்களை வெருட்டித் துரத்தினர். அதனையறிந்த அரசன் சீற்றமுற்றுத் தனது

ஸேனாதிபதியை விளித்து ''நீ சென்று பரகாலனைப் பிடித்து வா'' என்று நியமிக்க, அவன் அங்ஙனமே பல சேனைகளோடு வந்து இவரை வளைத்துப் பிடிக்கத் தொடங்க, இவர் ஆடல்மா என்று பிரசித்தமான தமது குதிரையின்மீது ஏறிக் கொண்டு சேனைகளோடு முன்சென்று எதிர்த்துப் பொருது அவனை முதுகுகாட்டி யோடச்செய்ய, அஃதுணர்ந்த அரசன் தானே ஸேனாஸமுகங்களோடு வந்து இவரை வளைய, இவர் தம் படை வலிமையினால் அப்படைக்கடலைக்கடந்து தமது திறமையைக் காட்டிப்பொருகையில், தாம் அருள் மாரியாதலால் அரசனைக் கொல்லலாகாதென்று சிறிது காலம் போர் நிறுத்தி நின்றார். அதுவே ஸமயமாக அரசன் தந்திரமாய் நல்வார்த்தை சொல்லிக்கொண்டு அருகில் வந்து 'உமது பராக்கிரமத்தைக் கண்டு மிக மகிழ்ந்தோம்' என்று கொண்டாடி 'விரைவில் கப்பஞ் செலுத்திவிடும்' என்று சொல்லி இவரை மந்திரி வசமாக்கிவிட்டுத் திரும்பிப் போயினன். அந்த மந்திரி இவரைப் பகுதிப் பொருளுக்காகப் பிடித்து ஒரு தேவா லயத்திற் சிறைவைக்க, அங்கு இவர் உணவு இல்லாமல் மூன்று நாள் பட்டினி கிடக்கையில், கச்சிநகர்த் தலைவனான பேரருளாளன் இவரது கனவிலே வந்து காட்சி தந்து 'உனக்கு வேண்டிய பொருள் தருகின்றோம், வா' என்று சொல்லி யருளினான். இவர் அக்கனவை நனவாகவே நம்பி எம்பெருமானது திருவருளுக்கு மகிழ்ந்து பொழுது விடிந்ததும் மந்திரியை நோக்கி ''காஞ்சீபுரத்திலே நிதி இருக்கின்றது; அங்கு வந்தால் தருவேன்'' என்றுகூற, அவன் அதனை அரசனுக்கு அறிவித்து அநுமதிபெற்றுப் பல பரிவாரங்களால் காவல் செய்து கொண்டு கச்சிப் பதிக்கு இவரை அழைத்து வந்தான். அங்கு இவர் நிதியைத் தேடிக் காணாது கவலைக்கடலில் மூழ்கி மூர்ச்சிக்குமளவிலே பொருளாளனாகிய வரந்தரும் மாமணி வண்ணன் மீண்டும் கனவில் எழுந்தருளி அபயமளித்து வேகவதியாற்றங் கரையில் நிதியுள்ள விடத்தைக் குறிப்பிட்டு அருளிச்செய்த பின்பு, இவர் தெளிந் தெழுந்து பொருள் கண்டெடுத்து அரசன் கடமையைச் செலுத்தி மிகுந்த தனத் தைப் பாகவதாராதனத்துக்கு வைத்துக் கொண்டார். அதன் பிறகு மந்திரி பொருளைக் கொண்டுபோய்ப் பிரபுவின் முன்னிலையில் வைத்து நடந்த செய்திகளைத் தெரிவிக்க, அவ்வரசன் இவரது மஹிமையை ஆராய்ந்து அச்சமும் ஆச்சரியமுங் கொண்டு உடனே இவரை வரவழைத்து விசேஷமாக உபசரித்து, தான் செய்த பிழைகளை யெல்லாம் பொறுத்தருளும்படி பிரார்த்தித்து, அநந்தரம் 'திரௌபதிக்குப் புடவை சுரந்தாப்போல மாயவனருளாற் பெருகிய இப்பொருளைக் கோசகிருஹத்தில் வைக்கலாகாது' என்று துணிந்து அப்பொருள் முழுவதையும் இவரைப் பட்டினி வைத்த பாவந்தீருகைக்காகப் பலபல பாகவதர்கட்குக் கொடுத்துப் பரிசுத்தனாயினன்.

## வயலாலி மணவாளனை வழிபறித்தல்

பிறகு பரகாலர், சேஷித்த பொருளைக்கொண்டு ததீயாராதனம் நடத்தி வருகையில் எல்லாம் செலவாய்விட்டதனால் கைப்பொருளொன்றுமின்றி வழி பறித்தாகிலும் பொருள் ஸம்பாதித்து அக்கைங்கர்யத்தைத் தடையற நடப்பிக்கத் துணிந்து, நீர்மேல் நடப்பான், நிழலிலொதுங்குவான், தாளூதுவான், தோலா வழக்கன் என்ற நால்வரை உற்றதுணைவராக உடன்கொண்டு ஆங்காங்குச் சென்று வழிச்செல்வோரைச் சூறையாடிக் கொணர்ந்த பொருளால் திருமாலடி யார்களைப் பூசிக்கும் நோன்பை நோற்று வந்தார். இவர் களவு செய்வதும் ஸ்ரீவைஷ்ணவர்களை ஆராதிப்பதற்கே யாதலால் நல்வினையாகவே கொண்டு இவர்க்கு விசேஷகடாக்ஷம் பண்ணி இவரை அங்கீகரிக்க வேண்டுமென்று திருவுள்ளம் பற்றி இவர் தன்னை வழி பறிக்குமாறு தான் ஒரு அந்தணனாக வேடம்

பூண்டு பல ஆபரணங்களையும் தரித்து மணவாளக்கோலமாய் மனைவியுடனே இவரிருக்கிற வழியே எழுந்தருள, திருமணங் கொல்லையில் திருவரசமரத்தின் கீழ்ப் பதுங்கியிருந்த குமுதவல்லி மணவாளர் கண்டு களித்து ஆயுதபாணியாய்ப் பரிவாரத்துடனே வந்து அவர்களை வளைந்து வஸ்திரபூஷணங்களை யெல்லாம் அபஹரிக்கையில் அம்மணவாளப்பிள்ளை காலில் அணிந்துள்ள மோதிரமொன்றைக் கழற்ற முடியாமையால் அதனையும் விடாமற் பற்களாலே கடித்து வாங்க அம் மிடுக்கை நோக்கி எம்பெருமான் இவர்க்குக் கலியன் என்றொரு பெயர் கூறி யருளினான். அதற்குப் பிறகு இவர் பறித்த பொருள்களையெல்லாம் சுமையாகக் கட்டி வைத்து எடுக்கப்பார்க்கையில் அப்பொருட்குவை இடம்விட்டுப் பெயராமல் மலைபோல் அசையாமலிருக்க, அதுகுறித்து ஆச்சரியப்பட்டுத் திருமங்கை மன்னன் அவ்வந்தணனை நோக்கி 'நீ என்ன மந்திரவாதம் பண்ணினாய்?' என்று விடாது தொடர்ந்து தன் கையிலேந்திய வாட்படையைக் காட்டி அச்சமுறுத்தி நெருங்க, அப்பொழுது ஸர்வேச்வரஸ்வரூபியான அந்த அந்தணன் 'அம்மந்திரத்தை உமக்குச் சொல்லுகிறோம் வாரும்' என்று அருகிலழைத்து ஸகல வேதஸாரமான திருவஷ்டாக்ஷர மஹாமந்திரத்தை, முன்பு நரநாராயணராய்த் தனக்குத்தானே சொல்லிக்கொண்ட குறைதீர இவர் செவியிலே உபதேசித்து உடனே கருடா ரூடனாய் இவர்முன் எழுந்தருளி ஸேவை ஸாதித்தான்.

## ஆழ்வார் திவ்யப்ரபந்தங்களருளிச் செய்யத் தொடங்குதல்

அங்ஙனம் மந்திரோபதேசம் பெற்றதனாலும் அந்த திவ்ய மங்கள விக்ர ஹத்தை ஸேவித்ததனாலும் முன்பு காலாழியைப் பற்களால் கழற்ற நேர்ந்தபோது பகவத் பாதாரவிந்தத்தில் வாயை வைத்ததனாலும் கலியன் அஜ்ஞானவிருள் நீங்கித் தத்துவஞானச் சுடரெழுந்து எம்பெருமானைப் பரிபூரணமாக அநுபவித்து அவ்வநுபவத்தாலுண்டான ஆநந்தாதிசயத்தை வெளியிடுமாறு ஆசுகவி, மதுர கவி, சித்திரக்கவி, விஸ்தாரக்கவி என்னும் நால்வகைக் கவிகளையும் பாடவல்ல பாண்டித்யமுடையவராய் ''வாடினேன் வாடி வருந்தினேன்'' என்று தொடங்கிப் பாடலுற்று, வடமொழி வேதங்கள் நான்குக்கும் ஆறு அங்கங்கள் அமைந்திருக் கின்றது போல அவ்வேதங்களின் உட்பொருளால் நம்மாழ்வார் அருளிச்செய்த நான்கு திவ்வியப் பிரபந்தங்களுக்கும் தமது பிரபந்தங்கள் அங்கங்களாக அமை யும்படி பெரியதிருமொழி, திருக்குறுந்தாண்டகம் திருவெழுகூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல், திருநெடுந்தாண்டகம் என்னும் ஆறு திவ்ய நூல் களைத் திருவாய்மலர்ந்தருளி, 'திருமங்கையாழ்வார்' என்று திருநாமம் பெற்றார். அவற்றுள் முதற்பிரபந்தம் — பெரிய திருமொழி அது 1084 பாசுரங்கள் கொண்டது.

## ஆழ்வாருடைய திவ்யதேச யாத்திரை

ஆழ்வார் இப்பிரபந்தம் பாடுகையில் தாம் உஜ்ஜீவந ஹேதுவாகப் பெற்ற திருவஷ்டாக்ஷர மஹாமந்திரத்தின் வைபவத்தை முதல் திருமொழியிலே பன்னி யுரைத்து, அநந்தரம் திவ்யதேச யாத்திரையாகச் சென்று ஆங்காங்கு பெருமானை மங்களாசாஸநஞ் செய்து பாசுரங்கள்பாட உத்தேசித்து பிரிதி, பதரிகாச்ரமம், ஸாளக்ராமம் நைமிசாரணியம், சிங்கவேழ்குன்றம், திருவேங்கடம் என்னும் வட நாட்டுத் திருப்பதிகளிற் சென்று எம்பெருமான்களை ஸேவித்துப் பாசுரம்பாடி, தொண்டைநாட்டுத் திருப்பதிகளுள் திருவெவ்வுளூர்க்கு வந்தபின் திருநின்ற ஊரைச் சேர்ந்தார்.

அத்திருப்பதியிலெழுந்தருளியுள்ள பத்தராவிப் பெருமாள் அப்பொழுது ஆழ்வார்க்கு முகங்கொடாமல் பிராட்டியோடு ஸரஸ ஸல்லாபஞ் செய்துகொண்டு பராமுகமாயிருக்க, அப்பால் அழ்வார் திருவல்லிக்கேணிக் கெழுந்தருளி மங்களா சாஸனஞ் செய்து திருநீர்மலை யெம்பெருமானையும் துதித்து அநந்தரம் திருக்கடன் மல்லையடைந்து பெருமானை ஸேவித்து நின்றார். அப்பொழுது திருநின்றவூரெம் பெருமான் திருமாமகளால் தூண்டப்பட்டு இவ்வாழ்வார் திருவாக்கினால் பாடல் பெற்றுச் சிறப்புறக்கருதி அக்கடன் மல்லையில் வந்து ஸேவை ஸாதிக்க, கலியன் அப்பெருமானையும் அங்கே கண்ணுரக்கண்டு களித்து அவ்வூர் விஷயமான திரு மொழியிலே ''நின்றவூர் நித்திலத்தைத் தொத்தார் சோலைக் காண்டவத்தைக் கனலெரிவாய்ப் பெய்வித்தானைக் கண்டது நான்கடன்மல்லைத் தலசயனத்தே'' என்று பாடினார்.

## ஞானசம்பந்தமூர்த்தி நாயனாரை வெல்லுதல்

இவ்வாறே மற்றுஞ் சில தொண்டைநாட்டுத் திருப்பதிகளையும் நடுநாட்டுத் திருப்பதிகளிரண்டையும் கடந்து சோழநாட்டுத் திருப்பதிகளில் தில்லைச் திருச் சித்திரகூடம் பாடியபின்பு சீர்காழி வழியாக எழுந்தருளுகையில் வழக்கப்படி பரிஜனங்கள் இவர் முன்னே ''நாலு கவிப்பெருமாள் வந்தார்! பரவாதி மத்தகஜ கண்டீரவர் வந்தார்!'' இத்யாதி பல பிருதாவளிகளை எடுத்தேத்திக்கொண்டு செல்லா நிற்கையில், அவ்வூரிலுள்ள ஞானசம்பந்த மூர்த்தி நாயனாரென்கிற சைவ சமயாசிரியருடைய அடியார்கள் வந்து ''எங்கள் நாயனாருள்ளவிடத்தே நீர் விருதூதிச் செல்லலாகாது'' என்று தடைசெய்ய; அதுகேட்டுப் பரகாலர் சம்பந்த ருள்ளவிடத்தே சென்று அவரோடு வாதப்போர் செய்யத் தொடங்குகையில், நாயனார் ஆழ்வாரை நோக்கி 'உமது கவித் திறத்தை யான் காணுமாறு முந்துற முன்னம் ஒரு பாடல் பாடும்' என்று சொல்ல, உடனே ஆழ்வார் ''ஒரு குறளா யிருநில மூவடி மண்வேண்டி'' என்று தொடங்கி அருகிலிருக்கிற காழிச்சீராம விண்ணகரமென்ற திருப்பதியிலுள்ள தாடாளப்பெருமாள் விஷயமாகப் பதிகம் பாடக்கேட்டு ஞானசம்பந்தர் மிக அதிசயித்து 'உமக்கு இந்த விருதுகள் யாவும் தகும் தகும்' என்று சொல்லித் தமது வேலாயுதத்தை இவர்க்குத் திருமுன் காணிக்கையாக ஸமர்ப்பித்து நன்கு பஹுமானித்து உபசரித்து வழிபட்டு வழி விட்டுமீள இம்மெய்யடியவர் வெற்றிவேல் பறித்துக்கொண்ட தமது கொற்றம் முற்றுந் தோன்ற ''செங்கமலத்தயனனைய மறையோர் காழிச் சீராம விண்ணகரின் செங்கண்மாலை, அங்கமலத் தடவயல் சூழாலி நாடனருள்மாரி அரட்டமுக்கி யடையார்சீயம், கொங்குமலர்க்குழலியர் வேள் மங்கை வேந்தன் கொற்றவேல் பரகாலன் கலியன் சொன்ன, சங்கமுகத்தமிழ்மாலை பத்தும் வல்லார் தடங்கடல் சூழுலகுக்குத் தலைவர் தாமே'' என்று தமது பாயிரத்தோடு அத்திருமொழியை முடித்துச் சயபேரி முழங்க அப்பாலெழுந்தருளித் தமது திருவவதார ஸ்தலத்திற்கு அடுத்த திருவாலியைச் சார்ந்து திருநாங்கூர்த் திருப்பதிகள் முதலியவற்றைப் போற்றித் திருவிந்தளூரையடைந்தார்.

## திவ்யதேசத் திருப்பணி

அப்பொழுது அத்திருப்பதி யெம்பெருமான் ஆழ்வார்க்குத் தன்னை ஒருகால் காட்டி மறைய, அவர் த்ருப்தி பெறுமல் மனக்குறையோடு ''வாசிவல்லீரிந்தளூரீர் வாழ்ந்தே போம் நீரே'' என்று தமது குறைபாடு தோன்றப்பாட, அதற்கு இரங்கிப் பெருமான் நிரந்தர ஸேவைஸாதிக்க அது பெற்று நிரம்பிய மனத்தராய்ப் பல திருப்பதிகளின் வழியாகத் திருவரங்கம் பெரிய கோயில் சேர்ந்து நம்பெருமாள்

பக்கலிலே மிக்க ஈடுபாடுகொண்டு பலபதிகங்கள் பாட அது கேட்டுத் திருவுள்ள முகந்து அப்பெருமான் திருமுக மலர்ச்சியோடு ஆழ்வாரைக் குளிர நோக்கி ''நமக்கு விமானம் மண்டபம் கோபுரம் பிராகாரம் முதலிய கைங்கரியங்களைச் செய்யும்'' என்று நியமித்தருள,

[ **ஜிதபாஹ்ய ஜிநாதிமணிப்ரதிமா அபி வைதிகயந்திவ ரங்கபுரே. மணிமண்டப வப்ர கணுந் விததே பரகாலகவி: ப்ரணமேமஹி தாந்** ] என்று ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் பட்டர் மங்களா சாஸநஞ் செய்துள்ளபடியே திருப்பணிகளைக் குறைவற முடித்தார்.

**இந்தத் திருப்பணி நடத்தின விதம்:—** நாகப்பட்டணத்தில் புத்தர்கள் பொன்னி னுலே மிகப் பெரிய பிரதிமைகளைச் செய்து வைத்து வணங்குகிறர்களென்றும் அவற்றை பறித்துவந்தால் யதேஷ்டமாகத் திருப்பணிகள் நிறைவேற்றலாமென்றும் அறிந்து ஆழ்வார் தமது பரிஜனங்களுடன் நாகப்பட்டணத்திற்கெழுந்தருளி இரவில் தந்திரத்தினுல் அந்த ஸ்வர்ண விக்ரஹங்களை யெல்லாம் எடுத்துக் கொண்டு அவற்றினுல் திருப்பணிகள் செய்து வந்தார். அவ்வாறு செய்து வரும் போது சில சிற்பிகளுக்குக் கூலி கொடுப்பதற்கில்லாமையால் அந்தச் சிற்பிகளைப் பரமபதம் சேர்ப்பதாகச் சொல்லி அவர்கள் இசைவின்மேல் அவர்களைப் படகில் ஏற்றிக் காவிரியின் பெருவெள்ளத்தில் கொண்டுபோய்க் கவிழ்க்க, அதில் விழுந்த சிற்பிகளெல்லோரும் அக்கணமே சோதிவடிவம் பெற்று விமானமேறி, கரையில் நின்று பார்த்தவர்களெல்லோரும் அதிசயப்படும்படி பரமபதம் சென்றனர்.

இங்ஙனே பலபல அதிசயச் செயல்களைச் செய்து விமாந கோபுர ப்ராகார மண்டபாதி திருப்பணிகளைக் குறையறச்செய்து தலைக்கட்டி, பிறகு பெருமாள் பக்கல் விடைபெற்று மீண்டும் திவ்யதேச யாத்திரை தொடங்கித் தென் திருப்பேர், நந்திபுர விண்ணகரம், திருவிண்ணகர் என்ற இத்தலங்களை மங்களாசாஸனஞ் செய்தபின் திருநறையூர் சேர்ந்து நம்பி விஷயமாக நூறு பாசுரம் விண்ணப்பஞ் செய்து, திருச்சேறை, தேரழுந்தூர் சிறுபுலியூர் எனனும் திருப்பதிகளின் வழி யாகத் திருக்கண்ணமங்கை புக்கு அத்திருப்பதி யெம்பெருமானைப் பாடித் துதிக் கையில் திருநின்றவூர்ப் பத்தராவிப் பெருமாள் முன்பு ( திருக்கடன் மல்லையில் ) யருபாடல் பெற்றது போதாதென்று மறுபடியும் ஆழ்வாரெதிரில் வந்து காட்சி ஒளிக்க ஆழ்வார் ''நின்றவூர் நின்ற நிலத்திலத் தொத்தினைக்...கண்ணமங்கையுட் கண்டுகொண்டேனே'' என்று அப்பெருமானையுஞ் சேர்த்துத் துதி செய்தனர். அப்பால் திருக்கண்ணபுரம் திருக்கண்ணங்குடி திருநாகை யென்னுஞ் சோழ நாட்டுத் திவ்ய தேசங்களையும் திருப்புல்லாணி திருக்குறுங்குடி யென்னும் பாண்டிய நாட்டுத் தலங்களையும் திருவல்லவாழ் என்னும் மலைநாட்டுத் திருப்பதியையும் மங்களாசாஸனஞ் செய்து மிகமகிழ்ந்து பின்னும் திருமாலிருஞ்சோலை திருக் கோட்டியூர் முதலானவற்றைத் தொழுது மற்றும்பல திருப்பதிகளையும் வணங்கி, எம்பெருமானுடைய அர்ச்சாவதாரங்களோடு விபவாவதாரங்களையுங் கருதி உள்ளங் கரைந்து பல பாசுரங்கள் பாடிக்கொண்டு ஆச்சரியமான அநுபவத்தில் ஆழ்ந் திருக்கையில், — எம்பெருமான் இவர்க்கு உண்டான இவ்வநுபவம் நித்யமாய்ச் செல்லுமாறு இவரைத் திருநாட்டிலே கொண்டுபோக நினைத்து அதற்காக இந்த ஸம்ஸாரமண்டலத்தின் கொடுமையை இவர்க்கு அறிவிப்போமென்றெண்ணி அப்படியே அறிவிக்க, அதனை யறிந்த ஆழ்வார் இந்தக் கொடுவுலகத்திலோ எம்பெருமான் நம்மை வைத்திருக்கிறது!' என்று மிகவும் அஞ்சிநடுங்கி இறுதித் திருமொழியிலே, ஆற்றங்கரை வாழ்மரம்போலஞ்சுகின்றேன்'' ''பாம்போடொரு

கூரையிலே பயின்றாற்போல்'' ''இருபாடெரி கொள்ளியினுள்ளெறும்பேபோல்'' ''வெள்ளத்திடைப்பட்ட நரியினம்போலே'' என்றிப்படி பலவற்றையும் தம்முடைய அச்சத்திற்கு த்ருஷ்டாந்தமாகக் காட்டி ''அந்தோ! அடியேற்கு அருளாய் உன்னருளே'' என்று பரமபத ப்ராப்திக்கு உறுப்பான பரிபூர்ணகிருபையைப் பிரார்த்தித்துப் பெரிய திருமொழியைத் தலைக்கட்டினார். நம்மாழ்வார் திருவாய்மொழி பாடித் தலைக்கட்டி அவாவற்று வீடுபெற்றாற்போல இவ்வாழ்வார் திருநெடுந்தாண்டகம் பாடித் தலைக்கட்டி வீடு பெற்றாராகிறார். ... ... ... *

**திருமங்கையாழ்வார் வைபவம் முற்றிற்று.**

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதிபயங்கரம்

**அண்ணாங்கராசாரியார் எழுதிய**

**குருபரம்பரா ப்ரபாவஸாரத்தில்**

**ஆழ்வார்கள் வைபவம் முற்றிற்று.**

---

— ஸ்ரீமந் நாதமுனிகள் தொடங்கி மணவாளமாமுனிகள்
வரையிலுமுள்ள பூருவாசாரியர்களின் பிரபாவம்
இனி வருமாறு காண்க —

---

ஆழ்வாரெம்பெருமானர் ஜீயர் திருவடிகளே சரணம்

# பூர்வாசார்ய வைபவம்

(ஸ்ரீகாஞ்சீ. ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்
தொகுத்தெழுதியது.

---

**ஸ்ரீ நாதயாமுநயதீச்வரகூரநாத பட்டார்யமுக்ய்யதருவர்ய சரித்ரஸாரம்,**
**பூர்வார்யஸூக்திமவலம்ப்ய லிகாமி தாவத் ஸம்க்ஷேபதஸ் ஸுலலிதம் விதுஷாம் நியோகாத்.**

## — முன்னுரை —

ஆழ்வார்களின் வைபவத்தை முன்னமே விளக்கியுள்ளோம். அந்த ஆழ்வார்களின் திவ்யஸூக்திகளைப் பல துறைகளில் வளர்த்தருளி நம் ஸ்ரீ வைஷ்ணவ தர்சனத்தை உத்தரிப்பித்தருளின ஸ்ரீமந் நாதமுனிகள் தொடக்கமான பூருவாசாரியர்களின் வைபவத்தை எளிய தெளிய நடையில் விளக்குவோமாக.

ஆசார்ய கோஷ்டியில் முதல்வர் ஸ்ரீமந் நாதமுனிகள். ஆழ்வார்களின் காலத்திற்குப் பிறகு நெடுநாள் வரையில் தர்சந நிர்வாஹகர்களான ஆசார்யர்கள் ஒருவருமில்லாமல் இவ்வுலகம் இருள்மூடியே இருந்ததனல் பேரருட்கடலான எம்பெருமான் இவ்விருளை நீக்கி ஞானவொளியை வளர்க்கத் திருவுள்ளம்பற்றி ஸ்ரீமந் நாதமுனிகள் முதலான ஸதாசார்யர்களைத் திருவவதரிப்பித்தருளி அவர்களின் உபதேசங்களாலும் ஸ்ரீ ஸூக்திகளான திவ்யக்ரந்தங்களாலும் அநுஷ்டாநங்களாலும் அநுஷ்டாபனங்களாலும் ஜகத்தை வாழ்வித்தருளினன். அவர்களுடைய ப்ரபாவம் நமக்கு நித்யாநுஸந்தேயமாகக்கடவது. ... .... *

## ஸ்ரீமந் நாதமுனிகள் வைபவம்

* நாதோபஜ்ஞம் ப்ரவ்ருத்தம் ... ...தர்சநம் ந:* என்று வேதாந்த வாரியரும் * அருள்பெற்ற நாதமுனி முதலாம் நந்தேசிகரையல்லால் பேதைமனமே யுண்டோ பேசு * என்று மணவாள மாமுனிகளும் அருளிச்செய்தபடியே நம்முடைய தர்சநம் ஸ்ரீமந் நாதமுனிகளையே தலைவராகக் கொண்டது. இவர், வீரநாராயணபுரமென்கிற காட்டுமன்னர் ஸன்னிதியில் ஆனிமாதம் அநூராதா நக்ஷத்திரத்தில் ஈச்வரமுநிகளுக்குத் திருக்குமாரராய்த் திருவவதரித்து, காலங்களில் சௌளம் உபநயநம் முதலிய ஸம்ஸ்காரங்களைப் பெற்று வேத வேதாங்கங்களையும் ஸாமாந்ய சாஸ்த்ர அத்யாத்ம சாஸ்த்ரங்களையும் அதிகரித்து மஹாவித்வானக எழுந்தருளியிருந்தார். இவருடைய திருக்குமாரரது திருநாமம் ஈச்வரபட்டாழ்வான். அவருடைய திருக்குமாரரே ஆளவந்தார்.

ஸ்ரீமந் நாதமுனிகள் தம் இருப்பிடந்தன்னில் மன்னனரென்கிற எம்பெருமானுக்கு ஸகலவிதமான கைங்கரியங்களையும் செய்துகொண்டு வாழ்ந்தருளும்

காலத்தில் வடநாட்டுத் திருப்பதிகளையெல்லாம் ஸேவிக்க ஆவல்கொண்டு மன்னனார் திருவடிகளிலே நியமனம் பெற்று ஸபரிவாரராய்ப் புறப்பட்டு வடக்கே ஸஞ்சரித்துக்கொண்டிருக்கையில் தம் இருப்பிடத்திற்கே மீண்டெழுந்தருளும்படி எம்பெருமான் நியமித்தருளினபடியாலே திரும்பி யெழுந்தருளி தென்திசைத் திருப்பதிகளையும் மங்களாசாஸநம் செய்தருளி மன்னனார் ஸந்நிதியிலே வந்து சேர்ந்து பகவத் பாகவத கைங்கர்ய நிர்வாஹத்தோடு அத்யாத்மசாஸ்த்ர ப்ரவசனங்களும் செய்துகொண்டிருந்தார்,

இப்படியிருக்கையில் அவ்விடத்திற்குத் திருநாராயணபுர ப்ராந்தத்தில் நின்றும் சில ஸ்ரீ வைஷ்ணவர்கள் வந்து மன்னனார் ஸன்னிதியில் தங்களுக்குத் தெரிந்த ஸ்தோத்ரங்களை யெல்லாம் அநுஸந்தித்துக் கொண்டிருக்கையில் நம்மாழ்வாரருளிச்செய்த திருவாய்மொழியில் * ஆராவமுதே அடியேனுடலம் * என்கிற பதிகத்தையும் செவிக்கினிய இசையுடனே அநுஸந்தித்தார்கள். அதில் முடிவு பாசுரத்தில் *குழலில் மலியச்சொன்ன ஓராயிரத்துளிப்பத்தும்* என்று அவர்கள் அநுஸந்தித்ததைக் கேட்ட நாதமுனிகள், இப்படி ஆயிரம் பாசுரங்கள் அவதரித்திருப்பதாகத் தெரிந்ததனால் அந்த ஸ்ரீ வைஷ்ணவர்களை நோக்கி 'ஸ்வாமிகாள்! உங்களுக்கு ஆயிரம் பாசுரமும் முகபாடமாக வருமோ?'' என்று கேட்டார். அவர்கள் ''இப் பத்துப்பாசுரந்தவிர வேறொரு பாசுரமும் அறியோம்'' என்றார்கள்.

அதற்குமேல் ''உங்கள் நாட்டில் இந்த ஸ்ரீகோசமாவது உண்டோ? ஆயிரமும் ஓதியிருப்பார் அவ்விடத்தில் ஆரேனுமுண்டோ?'' என்று நாதமுனிகள் கேட்க, அப்படியொன்றுமில்லை யென்று அவர்கள் விடை கூறிவிட்டு எம்பெருமானுடைய தீர்த்த ப்ரஸாதங்களை ஸ்வீகரித்துக்கொண்டு வழியடைவே சென்றார்கள்,

அது முதலாக நாதமுனிகளுக்கு இரவும் பகலும் இதுவே சிந்தையாயிற்று. ''குருகூர்ச் சடகோபன் சொன்ன ஆயிரம்'' என்று செவிப்பட்டபடியாலே அந்த சடகோபர் [நம்மாழ்வார்] திருவவதரித்த குருகூரிலே சென்று விசாரித்தோமாகில் அங்கே கிடைக்கக் கூடுமென்று கருதி எம்பெருமானிடம் விடைபெற்று ஆழ்வார் திருநகரிக்கு எழுந்தருளினார்.

அங்கே பொலிந்து நின்ற பிரானையும் நம்மாழ்வாரையும் ஸேவித்து நிற்கையில், ஸ்ரீமதுரகவிகளின் சிஷ்ய பரம்பரையிலே ஒருவரான ஸ்ரீபராங்குச தாஸரென்பவர் நேர்பட, அவரைத் தெண்டனிட்டுத் தாம் எழுந்தருளின கார்யத்தை விண்ணப்பஞ்செய்து '' இவ்விடத்தில் ஆயிரமும் தெரிந்தவர்களுண்டோ? ஸ்ரீ கோசமாவது உண்டோ?'' என்று கேட்க, அதற்கு அவர் சொன்னதாவது;— ''திருவாய்மொழியும் மற்றுமுண்டான திவ்யப்ரபந்தங்களும் பிரசாரம் மறைந்து நெடுநாளாய்விட்டது; ஆனாலும் எங்கள் குலக்கொழுந்தான ஸ்ரீமதுரகவிகள் அருளிச்செய்த கண்ணிநுண் சிறுத்தாம்பு என்னும் பிரபந்தமுண்டு; அதனை ஆழ்வார் திருமுன்பே ஆழ்வார் திருவடிகளைச் சிந்தித்துக்கொண்டு நியமத்துடனே பன்னீராயிரம் விசை ஜபித்தால் ஆழ்வார் ப்ரஸந்நராகி அருள்புரியக்கூடுமென்று கேட்டிருந்ததுண்டு'' என்றார்.

அதுகேட்ட நாதமுனிகள் திருவுள்ளம்தேறி ஆனந்தக்கடலில் மூழ்கின மனத்தராய் அவரைத் திருவடி தொழுது "ஸ்வாமிந்! அந்தக் கண்ணிநுண் சிறுத்தாம்பு பிரபந்தத்தை அடியேனுக்கு அநுக்ரஹித்தருள வேணும்" என்று விநயமுடன் வேண்ட, அவரும் திருவுள்ளமுவந்து இவர்க்கு அந்தப் பிரபந்தத்தைப் பாடம் செய்வித்தார். இவரும் அதிகரித்துத் திருப்புளியாழ்வாரடியிலே நியமமுடன் பன்னீராயிரம்முறை அந்தப் பிரபந்தத்தை யநுஸந்தித்துத் தலைக் கட்டினவாறே இவரது ஆர்த்திக்கு இரங்கின நம்மாழ்வார் பெரிய பிராட்டியாருடைய கட்டளையினாலும் பரோக்ஷமாக ஸந்நிதிபண்ணி அசரீரிவாணி சொல்லுவது போல "உமது அபிமதம் இன்னதென்று தெரிவிக்கவேணும்" என்று சொல்ல நாதமுனிகள் ஆனந்தக்கண்ணீர் பெருக நின்று கூப்பிய கையராய் "ஸ்வாமிந்! திருவாய்மொழி முதலிய திவ்யப்ரபந்தங்களை அடியேனுக்கு ப்ரஸாதித்தருள வேணும்" என்று விண்ணப்பஞ்செய்ய, ஆழ்வாரும் பரமப்ரீதராய் அவர்க்கு திவ்யமான ஞானக்கண்ணைக்கொடுத்து ரஹஸ்யத்ரயத்தையும் நாலாயிர திவ்யப் பிரபந்தங்களையும் தர்சனத்தின் ஆழ்பொருள்களையும் அஷ்டாங்க யோக ரஹஸ்யத்தையும் யோகதசையிலே ப்ரஸாதித்தருளி அந்தர்த்தாநமாயினர்.

ஸ்ரீ வேதாந்த வாசிரியர் பணித்த ஸம்ப்ரதாய பரிசுத்தி யென்னும் ரஹஸ்யத்திலே—'வேதாந்த ஸம்ப்ரதாயத்திற்கு இந்த யுகாரம்பத்திலே ப்ரஹ்மநந்த்யாதிகளுக்குப் பின்பு நம்மாழ்வார் ப்ரவர்த்தகரானர்" என்றும், "இப்பரம்பரையாலும் ப்ராதுர்ப்பாவ விசேஷத்தாலும் நாதமுனிகளுக்கு நம்மாழ்வார் ஆசார்யரானர்" என்றும் மேலே குருபரம்பரா ஸாரத்திலே—"இவ்வாசார்யர்களில்.........நாதமுனிகளுக்கு ஸ்ரீ மதுரகவிகள் முதலாக வுண்டான ஸம்ப்ரதாய பரம்பரையாலும் திருவாய்மொழி முகத்தாலும் யோகதசையிலே ஸாக்ஷாத்க்ருதராயும் நம்மாழ்வார் ஆசார்யரானர்" என்றும் எழுதிவைத்துள்ளவை காண்க.

**"வ்யோம்நः பரஸ்தாத் ஸவிதம் ஸமேத்ய லக்ஷ்ம்யா நியோகாத் குருகாதிராஜः**
**ஸமந்த்ரரத்நத்வயமாஹ யஸ்மை நாதாய தஸ்மை முநயே நமோஸ்து."**

என்கிற தனியனும் இங்கே அநுஸந்தேயம். இப்படி நம்மாழ்வார் பக்கலிலே ஸர்வஸ்வமும் லபிக்கப்பெற்ற நாதமுனிகள் சிலகாலம் திருநகரியிலேயே வஸித்திருந்து அங்குள்ளார்க்கு அருளிச் செயல்களை ப்ரவசனம் செய்தருளி, பிறகு ஸ்வதேசத்திற்கு மீண்டெழுந்தருள நியமனம் பெற்று வழியடைவிலுள்ள திருப்பதிகளையெல்லாம் மங்களாசாஸனம் செய்துகொண்டும் ஆங்காங்கு அருளிச்செயலமுதப் பெருக்கை வர்ஷித்துக்கொண்டும் மன்னனர் ஸந்நிதியிலே வந்து சேர்ந்து அந்த திவ்யப்ரபந்தங்களைப் பலமுகமாகப் பரவச்செய்ய பகவந்நியமனம் பெற்று, தம்முடைய மருமக்களான கீழையகத் தாழ்வாரையும் மேலையகத் தாழ்வாரையும் அழைத்து "ஆழ்வார் நம்மை விசேஷ கடாக்ஷம் பண்ணியருளி ப்ரஸாதித்த இந்த திவ்யப்ரபந்தங்களை இயலுமிசையுமாக்கவேணும்; திவ்யகானத்திலேயிட்டுப் பாடவேணும்" என்று நியமித்து அப்படியே பரிசயம் செய்வித்து இத்தை லோக ப்ரஸித்தமாக்கியருளினர்.

வடமொழி வேதத்திற்கு வேதவ்யாஸ பகவான் போலே தமிழ்மறைக்கு ஸ்ரீமந் நாதமுனிகள்—என்று ப்ரஸித்தமாயிற்று.

நாதமுனிகள் தேவகானத்திலே ஒப்புயர்வற்ற பாண்டித்யம் பெற்றிருந்த படியைக் கங்கைகொண்ட சோழபுரத்தரசன் முதலான மஹாப்ரபுக்கள் பரீக்ஷித்தறிந்து இவரை ஸத்கரிக்க விரும்பின வளவிலே இவர் அந்த ஸத்காரத்திலே நசையற்றவராய் மன்னனுர் திருவடிகளிலே நித்யகைங்கர்யமே நிதியாகக்கொண்டு பரமைகாந்தியாய் வாழ்ந்திருந்தார்.

இவருடைய திருவடிகளிலே ஆச்ரயித்தவர்கள் எண்மர்: அவர்களின் திருநாமங்களாவன— 1. உய்யக்கொண்டார், 2. குருகைகாவலப்பன், 3. நம்பி கருணாகரதாஸர், 4. ஏறுதிருவுடையார். 5. திருக்கண்ணமங்கையாண்டான், 6. வானமாமலை தேவியாண்டான், 7, உருப்புட்டூராச்சான் பிள்ளை, 8. சோகத்தூராழ்வான்.

இந்த சிஷ்யர்களுக்கு நாலாயிர திவ்யப்ரபந்தங்களையும் ஓதுவித்து வேத சாஸ்த்ரங்களையும் அதிகரிப்பித்து வாழ்வித்தருளினர். ந்யாயதத்துவம் என்கிற க்ரந்தம் இவரருளிச் செய்ததாகச் சொல்லுவர்கள், அது இப்போது லோபமடைந்துள்ளது. அந்தக்ரந்தத்தின் மங்களச்லோகமொன்று தெரியவருகின்றது, *யோ வேத்தி யுகபத் ஸர்வம் ப்ரத்யக்ஷேண ஸதா ஸ்வதஃ, தம் ப்ரணம்ய ஹரிம் சாஸ்த்ரம் ந்யாயதத்வம் ப்ரசக்ஷ்மஹே* என்பதாம். (இன்னுஞ்சில சுலோகங்களும்) வேதாந்த வாசிரியர் காலம் வரையில் இந்த க்ரந்தம் ப்ரசாரத்திலிருந்து வந்ததாக ந்யாயஸித்தாஞ்ஜநம் முதலிய க்ரந்தங்களினுல் தெரியவருகின்றது.

*லோகேவதீர்ண பரமார்த்தஸமக்ர பக்தி யோகாய நாதமுநயே யமிநாம் வராய* என்று ஆளவந்தார் அருளிச்செய்தபடியே இவர் யோகத்திலே நெடுங் காலம் எழுந்தருளியிருந்தார். குருகைகாவலப்பனென்கிற சிஷ்யர்க்கு யோக ரஹஸ்யத்தை அப்யஸிக்கும்படி நியமனம் தந்து அஷ்டாங்க யோகக்ரமத்தை அவர்க்கு அருளிச்செய்தருளினர். தம்முடைய திருக்குமாரராகிய ஈச்வர பட்டாழ்வானைப் பார்த்து "உமக்கு ஒரு குமாரர் தோன்றுவர், அவர்க்கு யமுனைத் துறைவர் என்று திருநாமம்சாத்த வேணும்" என்று நியமித்து, உய்யக்கொண்டாரை நோக்கி அந்தத்திருப்பேரனுர்க்கு தர்சநார்த்தங்களை யுபதேசிக்கும்படிக்கும் நியமித்தருளி முன்போல் யோகத்தில் அமர்ந்தார்.

இப்படியிருக்கையில் ஒருநாள் சோழராஜன் ஸபரிவாரனுய் வேட்டையாட வந்து திரும்பிப்போகையில், இவருடைய பெண்பிள்ளைகள் வந்து "ஐயா! நம் அகத்திலே ஒரு குரங்கும் இரண்டு வில்லிகளும் ஒரு பெண்பிள்ளையுமாக வந்து நாதமுனிகள் எங்கேயென்று தேடிப்போனுர்கள்" என்று சொல்ல, அதுகேட்ட நாதமுனிகள் *அக்ரதஃ ப்ரயயௌ ராமஸ் ஸீதா மத்யே ஸுமத்யமா, ப்ருஷ்டதஸ்து தநுஷ்பாணிர் லக்ஷ்மணோநுஜகாமஹ* என்று சொல்லப்பட்ட பெருமாளும் பிராட்டியும் இளையபெருமாளும் சிறியதிருவடியுமாக இந்நால்வர் வந்திருக்கக் கூடுமென்று எண்ணி அவர்களைப் பின்தொடர்ந்து செல்வதாகப் புறப்பட்டு,

வழியில் எதிர்ப்பட்டவர்களை யெல்லாம் 'இங்ஙனே போகிறவர்களைக் கண்டீர்களோ?' என்று கேட்க, அவர்களும் 'போகிறார்கள், போகிறார்கள்' என்றேசொல்ல, விரைந்து வெகுதூரமெழுந்தருளிக் கங்கைகொண்ட சோழபுரத்தில் கீழ்வாசல் வரையில் எழுந்தருளி, அங்குள்ளவர்களை நோக்கி விசாரிக்கையில், அவர்கள் 'நாங்கள் பார்க்கவில்லையே' என்று சொல்ல, போகிற வில்லிகளும் காணக்காண மறைந்தவாறே இவரும் ஏங்கிவிழுந்து மோஹித்து அதுவே ஹேதுவாக அவ்விடத்திலேயே திருநாட்டுக்கெழுந்தருளினார்.

இந்தச் செய்தியை சிஷ்யவர்க்கங்கள் கேட்டு வியாகுலப்பட்டு அங்கே சென்று அந்த விமல சரம விக்ரஹத்தை ஸேவித்துச் சோகித்து, க்ரமத்திலே தரிப்புப்பெற்று சரம கைங்கர்யங்களைக் குறையற நிறைவேற்றினார்கள்,

குருகைகாவலப்பன் என்கிற சிஷ்யரொருவர் ஸ்ரீமந் நாதமுனிகள் எப்போதும் யோகத்திலெழுந்தருளி யிருக்குமிடத்துக்கு ஸமீபத்திலே யோக நிஷ்ணுதராய் எழுந்தருளியிருந்தார். ... ... .... ... *

**ஸ்ரீமந் நாதமுனிகள் வைபவம் முற்றிற்று.**

---

## உய்யக்கொண்டார் மணக்கால்நம்பிகளின் வைபவம்.

ஸ்ரீமந் நாதமுனிகளின் திருவடிகளில் ஆச்ரயித்திருந்த முதலிகளுள் தலைவரான உய்யக்கொண்டார் சித்திரையில் கார்த்திகை நன்னாளில் திருவவதரித்தார், நாதமுனிகள் ஸ்ரீபாதத்திலே ஸகலார்த்தங்களையும் பெற்று க்ருதார்த்தராய் அருளிச்செயல்களை ப்ரவசனஞ் செய்துகொண்டு தர்சநப்ரவர்த்தகரா யெழுந்தளியிருந்தார்.

இவருடைய சிஷ்யர்களில் மணக்கால் நம்பிகள் தலைவராயிருந்தார். அவர் உய்யக்கொண்டார் திருவடிகளிலே பன்னிரண்டு ஸம்வத்ஸரகாலம் இடைவீடின்றி அத்தாணிச் சேவகராய் வழுவிலா வடிமைகள் பலவுஞ்செய்து கொண்டிருந்தாரென்று ப்ரஸித்தி. உய்யக்கொண்டாருடைய தேவிகளான ஆண்டாள் ஆசார்யன் திருவடிச் சார்ந்தவளவிலே திருமாளிகைக் கைங்கர்ய நிர்வாஹங்களை யெல்லாம் இவர் தாமே தம்மதாக்கிக்கொண்டு நடத்திவருகையில், உய்யக்கொண்டாருடைய பெண்பிள்ளைகளிருவரையும் நீராட்டி யழைத்துக்கொண்டு வருகிற வழியிலே வாய்க்கால் சேறாயிருக்க, அதில் நடந்து வரமாட்டாமல் தளர்ந்துநின்ற அப்பெண்பிள்ளைகளை நம்பி தாம் படியாகக்கிடந்து தம் முதுகிலே அடியிட்டுச் செல்லும்படி செய்துவர, இச்செய்தியை உய்யக்கொண்டார் கேட்டு மிகவுமுகந்து அந்தவுகப்பின் மிகுதியாலே தம் திருவடிகளை அவருடைய சென்னிக்கு மலர்ந்த பூவாக்கி அவரை மகிழ்வித்தருளினார்.

நாளடைவிலே உய்யக்கொண்டார் திருநாட்டுக்கெழுந்தருள விருக்கையில் மணக்கால் நம்பியை அருகேயழைத்து 'வாரீர்! இங்குள்ள முதலிகளைக் கூட்டிக்கொண்டு நீர் தர்சநம் நிர்வஹிக்கக்கடவீர்; நம் நாதமுனிகளுக்கு ஒரு திருப்பேரனார்

அவதரிப்பர்; அவர்க்கு யமுனைத்துறைவரென்று திருநாமஞ் சாத்தும்படிக்கும் ஸகலதர்சநார்த்தங்களையும் ரஹஸ்யார்த்தங்களையும் உபதேசிக்கும்படிக்கும் நாதமுனிகள் தமது சரமதசையிலே நமக்கு நியமனம் தந்தருளினார்; அக் கட்டளையை நிறைவேற்றும் பாக்கியம் நான் பெற்றிலேன். இந்தபாக்கியம் உமக் காகக்கடவது; நீர் அவரை அநுவர்த்தித்தாகிலும் ரஹஸ்யார்த்தங்களை உபதே சிக்கவேணும்' என்று நியமித்தருளி ஸ்ரீமந் நாதமுனிகளின் திருவடிகளைச் சிந்தித் துக்கொண்டே திருநாட்டுக் கெழுந்தருளினார்.

இத்துயரம் பொறுக்கமாட்டாத நம்பி முதலான திருவடிகள் மிகவும் சோகித்துத் தேறி நின்று சரமகைங்கர்யங்களைக் குறையற நடத்திப் போந்தார்கள். மணக்கால் நம்பியும் ஸ்வாசார்ய நியமனத்தை நிறைவேற்றுவதற்காக நாதமுனி களின் திருப்பேரனாரது திருவவதாரத்தை ப்ரதீக்ஷித்துக் கொண்டிரா நின்றார்.

---

## யமுனைத்துறைவர் வைபவம்

மணக்கால் நம்பி தர்சந ப்ரவர்த்தகரா யெழுந்தருளியிருந்த காலத்திலே, ஸ்ரீமந்நாதமுனிகளின் திருக்குமாரரான ஈச்வர பட்டாழ்வார்க்கு ஆடிமாதத்து உத்த ராடத்திலே ஒரு திருக்குமாரர் தோன்ற அதுகேட்டு உள்ளம் பூரித்த நம்பிகள் அங்கேற வெழுந்தருளி அக்குழந்தைக்கு ஜாதகர்மத்தைச் செய்வித்து, பத்து நாளுங் கடந்த விரண்டாநாளில் நாதமுனிகளின் நியமனப்படியே யமுனைத் துறைவரென்று நாமகரணமுஞ் செய்வித்தார்.

பிறகு அத்தெய்வக் குழவி சுக்லபக்ஷ சந்திரனைப்போன்று நாடோறும் மிக விளங்கி வளர்ந்து வருகையில் அந்நப்ராசநம் சௌளம் உபநயநம் முதலியவை உரிய காலங்களிலே நடைபெற்று அதிமேதாவியாய் வேதமோதுகையிலேயிழிந்து இரண்டாஞ் சந்தை சொல்லவேண்டாதே ஒருருவிலேயே அதிகரிக்கலாயிற்று.

இங்ஙனே அங்கோபாங்கங்களையும் அதிகரித்துக் கொண்டிருக்கையில் திருத்தகப்பனார் திருநாட்டுக்கெழுந்தருள, அவருடைய சரமகைங்கரியங்களையும் குறைவற நிறைவேற்றி, ஸாமாந்ய விசேஷ சாஸ்த்ரங்களை அதிகரிப்பதிலேயே கண்ணுங் கருத்துமாயிருந்து வந்தார் யமுனைத்துறைவர். அக்காலத்தில் மஹா பாஷ்ய பட்டர் என்னுமாசிரியர் சாஸ்த்ரப்ரவசந ப்ரவீணராயிருக்கையாலே அவரிடத்தில் இவர் சாஸ்த்ரங்கள் வாசித்து வந்தார். சோழராஜனது ஆஸ்தா னத்தில் மஹா வித்வானாயிருக்கும் ஆக்கியாழ்வானென்னும் பண்டிதன் அந்நாட்டி லுள்ள வித்வான்களை வென்று அவர்களெல்லாரும் தனக்குக் கப்பமிறுக்கும்படி செய்துகொண்டிருந்ததனால், ஒருநாள் யமுனைத்துறைவருடைய ஆசிரியரான மஹாபாஷ்யபட்டரிடத்திலே கப்பம் வாங்குவதற்குச் சேவகன் வந்து நிற்க, அவ்வாசிரியரும் கையில் காசில்லாமையாலே ஒன்றும் தோன்றாது மனம் நொந் திருக்க, யமுனைத்துறைவர் விஷயமறிந்துகொண்டு அந்தச் சேவகன் கொணர்ந்த பத்திரிகையைக் கிழித்தெறிந்துவிட, அவன் ஆக்கியாழ்வானிடஞ் சென்று செய்தி

யறிவிக்க, அவன் "அந்த வித்தியார்த்தி வெறுங்கவியா? சாஸ்த்ரம் வல்லவனா? இதை நன்கு தெரிந்துகொண்டுவா" என்றுசொல்லி அந்தச் சேவகனைத் திருப்பி யனுப்ப, அவன் திரும்பிவந்து விசாரிக்கையில், யமுனைத்துறைவர் * நவயம் கவயஸ் து கேவலம் ந வயம் கேவலதந்த்ரபாரகா: அபி து ப்ரதிவாதிவாரண ப்ரகடாடோபவிபாடநக்ஷமா:" என்கிற இந்த ச்லோகத்தை ஓர் ஏட்டிலே யெழுதிப் போக விட்டார். [இதன் பொருள் : நாம் வெறும் கவியுமல்லோம், வெறும் சாஸ்த் ரஜ்ஞரு மல்லோம்; பிரதிபக்ஷிகளாகிற மதயானைகளின் செருக்கையடக்கவல்ல சிங்கமென்று கொள்க என்றபடி.]

இதை வாசித்துப்பார்த்த ஆக்கியாழ்வான் இப்படியும் ஒரு வித்வானுளனோ! என்று வியப்புக்கொண்டு இவ்விஷயத்தை அரசனுக்கு அறிவிக்க, அரசனும் அந்த யமுனைத்துறைவர் விரைவாகத் தம்மிடம் வருகவென்று கட்டளை தெரிவித்து எழுந்தருள்வதற்காகப் பல்லக்கும் அனுப்ப, ஸ்வாமி அதிலேயெழுந்தருளி ராஜ த்வாரத்திலே வந்து சேர்ந்து,

**ஆசைலாத் அத்ரிகந்யாசரணகிஸலயந்யாஸதந்யோபகண்டாத்**
**ஆரக்ஷோநீதஸீதாமுக கமலஸமுல்லாஸஹேதோச்ச ஸேதோ: !**
**ஆ ச ப்ராச்யப்ரதீச்யக்ஷிதிதரயுகளாத் சந்த்ர ஸூர்யாவதம்ஸாத்**
**மீமாம்ஸாசாஸ்த்ரயுக்மச்ரம விமலமநா: ம்ருக்யதாம் மாத்ருசோந்ய: !!**

[இதன் கருத்து—இமவந்தந்தொடங்கி யிருங்கடலளவான வடக்குத்தெற்குத் திசைகளிலும், கிழக்கு மேற்குத் திசைகளிலும் உபயமீமாம்ஸைகளிலும் பரிச்ரமப் பட்டுத் தேர்ச்சிபெற்ற என்னைப்போன்ற வேறொரு வித்வானைத் தேடிப்பிடியுங்கள், பார்ப்போம் என்றபடி.] இங்ஙனே இந்தச்லோகத்தை யெழுதியனுப்ப, இதை ஆக்கியாழ்வான் கண்டு மிகவும் கோபாவேசம் கொண்டு வீண் டம்பமாக இப்படி யெழுதியனுப்புகிற பண்டிதரை நான் வாதப்போரில் வென்று செருக்கடக்கியே நிற்பேன்' என்று அரசனிடம் கூற, அரசனும் யமுனைத்துறைவரை அருகில் வரவழைத்து 'ஆஸ்த்தான வித்வானோடு நீர் தர்க்கம் செய்யவேண்டும்; உடன் படுகிறீரா?' என்று கேட்க; 'அதற்காகவே நான் வந்திருக்கிறேன்; என்ன தடை? எம்மிருவர்க்கும் வாதப்போர் நிகழவேண்டியது அவசியமே; ஆனால் எங்களுடைய வெற்றிதோல்விகளை நிர்ணயிப்பதற்கு மத்யஸ்த பண்டிதர்கள் வேணுமே; இல்லை யேல் இந்த வாதத்திற்கு முடிவுஏது? ஆகவே, மத்யஸ்த வித்வான்களைத் திரட்டிக் காணீர்' என்று ஸ்வாமி அரசனிடம் அறைந்தார்.

அரசனும் அப்படியே மத்யஸ்த வித்வான்களை யழைப்பித்து வித்யாஸ்தான மண்டபத்திலே அனைவரையும் வீற்றிருக்கச்செய்து தானும் தன் மஹிஷியுமாய் அங்குச்சென்று சீரிய சிங்காசனத்தில் அமர்ந்து இனி வாதப்போர் தொடங்கலா மென்று சாற்றினன். அப்போது ராஜாவுக்கும் ராஜமஹிஷிக்கும் பரஸ்பரம் ஒரு ஸமயபந்தம் நடந்தது. *ரூபமேவாஸ்ய ஏதந்மஹிமாநம் வ்யாசஷ்டே * என்னும் படியான முகவொளியை யமுனைத்துறைவரிடத்திலே கண்ட ராஜமஹிஷியானவள் 'இவர் தோல்வியடையார்' என்றனள். தன்னுடைய ஆஸ்தான வித்வானிடத்தில் பக்ஷபாதங்கொண்ட அரசன் 'நமது வித்வான் ஒருநாளும் தோலார்' என்றனன். முடிவாக, வெற்றிபெறும் வித்வானுக்குப் பாதி ராஜ்யம் தருவேனென்றுங் கூறினன்.

இவ்வளவிலே, ஆக்கியாழ்வான் யமுனைத்துறைவரைநோக்கி, "நாம் சாஸ்திரார்த்தங்களிலே வாதாடுவதற்கு முன்னே லௌகிகத்திலும் சிறிது வாதாடக்கடவோம். நீர் அன்றென்பதை நான் ஆமென்னக்கடவேன். நீர் ஆமென்பதை நான் அன்றென்னக் கடவேன், வென்றவன் தோற்றவன் தலையிலே தாடனம் பண்ணுவது' என்றொரு சிறுவார்த்தை கூற, அதுகேட்ட ஸ்வாமி உடனே 1. த்வந்மாதா ந வந்த்யா, 2. ராஜா ஸார்வபௌமः, 3 ராஜபத்நீ பதிவ்ரதா என்று லௌகிக வார்த்தைகள் மூன்று அருளிச்செய்தார். உன்னுடைய தாயார் மலடியல்லள் என்பது முதல் வாக்கியம். இதை அவன் மறுக்கவேணுமானால் 'என் தாய் மலடியே' என்னவேணும். இவ்வரசன் பூமண்டலம் முழுவதையும் ஆள்பவன் என்பது இரண்டாம் வாக்கியம். இதை மறுத்தால் அரசனுடைய சீற்றத்திற்கு இலக்காகவேணும். இவ்வரசி கற்புடையவள் என்பது மூன்றாவது வாக்கியம். இதை மறுத்தால் அவளுடைய நிக்ரஹத்திற்குப் பாத்திரமாக வேண்டிவரும். ஆகவே ஒன்றுக்கும் மறுவாய் திறக்கமாட்டாமல் தலைகுனிந்து நின்றான் ஆக்கியாழ்வான்.

பிறகு சாஸ்த்ரார்த்தங்களிலும் வாதப்போர் நடக்க, அதிலும் அவன் விரைவாகவே தோற்றனனாக, அப்போது ஸ்வாமி "அடா அல்பஜ்ஞனே! வென்றவன் தோற்றவன் தலையிலே தாடனம் பண்ணக்கடவதென்று ஸமயபந்தம் செய்தாய், நீ ராஜபுரோஹிதனாய் வயதில் முதிர்ந்தவனாயுமிருத்தலால் நான் அதுசெய்ய வல்லேனல்லேன்" என்றருளிச்செய்ய, இதைக்கேட்ட வித்வான்களனைவரும் உகந்து இவரை ப்ரஹ்ம ரதத்திலேற்றி உத்ஸவம் நடப்பிக்க, அப்போது ராஜமஹிஷி "என்னை ஆளவந்தீரோ?" என்று ஸ்வாமியை எடுத்தணைத்துக்கொண்டு தன் கொழுநனுடன் மணிமாடமாளிகைக்குள்ளே புகுந்தாள். அன்றுதொடங்கி இவர் ஆளவந்தார் என்ற சிறப்புத் திருநாமம் பெற்றார். அரசனும் ஏற்கெனவே வாக்களித்திருந்தபடி இவர்க்குப் பாதிராஜ்யம் கொடுத்து ஆதரிக்க, ஆளவந்தார் ஸஹதர்மசாரீ ஸமந்விதராய் ராஜபோகத்திலே ஸுகமாக எழுந்தருளியிருந்தார்.

இவ்வதிசயங்களை யெல்லாங் கேட்டுணர்ந்த மணக்கால்நம்பி பரமானந்தப்பட்டு ஆளவந்தாரைக்காணவேணுமென்று ஆசைகொண்டு அங்கேறவெழுந்தருள, அங்கு ஸாம்ராஜ்யத்துக்குத் தக்கபடி கட்டுங் காவலுமாயிருந்ததனால் உள்ளே புகப்பெறாமல் ஆளவந்தாரைக் காணமுடியாமல் சிலநாள் வருந்தியிருந்து உபாய சிந்தை பண்ணுகையில், திருமடைப்பள்ளியில் ஸ்வாமிக்குத் திருப்போனகம் சமைக்கிற ஸ்ரீவைஷ்ணவர் மூலமாக 'ஆளவந்தார் விரும்பி யமுதுசெய்யும் கறியமுது தூதுளை' என்றறிந்து, நம்பியும் அன்றுமுதல் ஆறுமாஸகாலம் தூதுளைக் கீரை யிட்டுவந்தார். இப்படி நடத்தினவிடத்திலும் ஒரு விசாரமும் காணாமையாலே திருவுள்ளம் வருந்திச் சிலநாள் தவிர்ந்திருந்து பார்ப்போமென்று தூதுளை யிடாமல் வாளாவிருந்தார். அப்போது ஆளவந்தார் அமுது செய்கையில் 'தூதுளை யில்லாமற் போனதேன்?' என்று தளிகை செய்பவரைக் கேட்க, 'ஒருகிழவர் ஆறு மாதமாக நாடோறும் கொணர்ந்து கொடுத்துவந்தவர் இப்போது தவிர்ந்தார்' என்று தளிகைக்காரர் கூற, ஆளவந்தார் அதுகேட்டு விஸ்மயப்பட்டு 'அப்படியா? இனியொருகால் அவர் வந்தாராகில் நமக்குத் தெரிவிப்பது' என்றருளிச் செய்துவைத்தார்.

மணக்கால்நம்பி மறுபடியும் ஆசைகொண்டு 'இன்னமுஞ் சிலநாள் பச்சை யிட்டுப் பார்ப்போம்' என்று தூதுளைகொண்டு ஸமர்ப்பிக்க வெழுந்தருள, தளிகைக் காரர் ஆளவந்தார்க்குச் செய்தியறிவித்தவாறே அவரை உள்ளேபுக விடவேணும் என்று நியமனமாக, நம்பியும் உள்ளே சென்று நின்றார். ஆளவந்தார் நம்பியின் விலக்ஷண தேஜஸ்ஸைக் கண்டவாறே பரவசராய்த் தெண்டனிட்டு ஆஸன மளித்து 'தேவரீர் இத்தனை நாளாக நமக்குப் பச்சையிடுகிறது என்ன அபேக்ஷை கொண்டு? அபேக்ஷிதமானதை யறிவித்தால் யதாசக்தி ஸமர்ப்பித்துக்கொள் வேன்' என்றருளிச்செய்ய, நம்பியும் 'நமக்கு ஒன்றும்வேண்டா; நாம் உமக்குக் கொடுக்க வந்தோமேயன்றி உம்மிடத்துக் கொள்ளவந்தோமல்லோம்; உமது பூருவர்கள் தேடிவைத்த அர்த்தமிருக்கின்றது; அந்த நிதி கிடக்கிறவிடமும் நானறிவேன்; அதனை நீர் கைக்கொண்டருளுமளவும் நித்யமாக நான் இங்கே தடையொன்றுமின்றி வந்து போம்படி அப்பணையிடவேணும்' என்ன; ஆளவந் தாரும் அப்படியே வாசலில்தகையாதபடி கட்டளையிட, நம்பியும் அன்றுமுதல் கீதையின் செம்மைப்பொருள் தெரியும்படி பதினெட்டு அத்யாயமும் எடுத்துரைக்க, ஆளவந்தாரும் ஆரணஸாரமான கீதையின் உட்பொருள் கேட்டருளி திநே திநே ஆர்த்தி அதிகரிக்கப்பெற்று 'அப்பரம்பொருளை ஸாக்ஷாத்கரிக்குமுபாயமில்லையோ?' என்று நம்பியைக் கேட்க, நம்பியும் ஸாக்ஷாத்கரிக்கலாமுபாயமுண்டு என்று ஏகாந்தத்திலே சில ரஹஸ்யார்த்த விசேஷங்களை ப்ரஸாதித்தருள, அதுகேட்ட ஆளவந்தார்க்கு, நெல்லுக்குப் பால் கட்டக்கட்டத் தலைவணங்குமாபோலே சரணா கதியின் சுவை நெஞ்சிலே படப்பட பரமாத்மநி அநுராகமும் இக்கொடிய ஸம்ஸாரத்தில் விராகமும் பிறந்ததாக, அந்தப் பரிபக்குவ நிலைமைக்குத் திருவுள்ள முவந்த நம்பி இதுவே ஸமயமென்றுகொண்டு அவரைத் திருவரங்கம் பெரிய கோயிலேற அழைத்துக்கொண்டு சென்று பெரிய பெருமாளை ஸேவிக்கப்பண்ணி, 'உமது பூருவர்கள் தேடிவைத்த மஹாநிதி இதுகாணும்' என்று காட்ட ஆளவந் தாரும் ஸேவித்து உள்ளம்பூரித்து, பழுதே பலபகலும் போயினவே! என்று இழந்த நாளைக்கு அநுதபித்துக் கண்ணுங்கண்ணீருமாய் அரங்கத்தம்மானை யநுபவித்து *யதஹ ரேவ விர ஜேத் ததஹரேவ ப்ரவ்ரஜேத்* என்றதை யடியொற்றி ஸந்ந்யா ஸாச்ரம ஸ்வீகாரம் செய்தருளி "அண்டர்கோனணியரங்க னென்னமுதினைக்கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணவே" யென்றுகொண்டு தென் திருவரங்கமே பதியாக வாழ்ந்து போந்தார்.

அப்போது, பெரியநம்பி, திருக்கோட்டியூர்நம்பி, திருமலைநம்பி, திருமலை யாண்டான், திருக்கச்சிநம்பி, வானமாமலையாண்டான், தெய்வவாரியாண்டான் முதலான இருபது முதலிகள் ஆளவந்தார் ஸ்ரீபாதத்திலே ஆச்ரயித்து வாழ்ந்தார்கள்.

இவர்களெல்லாரும் வித்வான்களுமாய் தர்சனதுரந்தரர்களுமாயிருக்கிற காலத்திலே மணக்கால்நம்பி ஆளவந்தாரை நோக்கி 'வாரீர்! இன்னமொரு ரஹஸ்ய விசேஷம் குருகை காவலப்பனிடத்திலே யுண்டு; அங்கே போய்க்கேளும்' என்றருளிச்செய்ய, அதற்கு ஆளவந்தார் 'அந்த ரஹஸ்ய விசேஷம் தேவரீருக்கு

இல்லாதேபோவானேன்?' என்ன, நம்பியும் 'உமது பிதாமஹரான ஸ்ரீமந் நாதமுனிகள் அந்த விசேஷத்தை அப்பன் பக்கலிலேயே வைத்துப்போனார்' என்ன; ஆகில் அங்கே கேட்போமென்று ஸமய ப்ரதீக்ஷராயிருந்து கோயிலிலேயே தர்சனம் நிர்வஹித்து வந்தாராளவந்தார்.

மணக்கால்நம்பி திருவடிகளிலே ஆச்ரயித்த முதலிகள்—ஆளவந்தார், தெய்வத்துக்கரசுநம்பி, கோமடத்துத் திருவிண்ணகரப்பன், வங்கிப்புரத்தாச்சி முதலானோர். நம்பி இவர்களுக்கு அருளிச்செயல்களையும் மற்றுமுள்ள விசேஷார்த்தங்களையும் ப்ரஸாதித்தருளி *நலமந்தமில்லதோர் நாடுபுகும் நாள் அணித்தானவாறே* ஆளவந்தாரை நோக்கிப் பல ஹிதங்களுரைத்து 'உம்மைப்போலே ஒரு தர்சனப்ரவர்த்தகரை உண்டாக்கிக் கோயிலை விடாதேயிரும்' என்று நியமித்து உய்யக்கொண்டார் திருவடிகளைச் சிந்தித்துக்கொண்டே திருநாட்டுக் கெழுந்தருளினார். இவருடைய திருநக்ஷத்திரம் மாசியில் மகம். இவரது தனியன். *அயத்ந தோ யாமுந மாத்மதாஸம் அலர்க்கபத்ரார்ப்பண நிஷ்க்ரயேண, யஃக்ரீதவாந் ஆஸ்திதயௌவராஜ்யம் நமாமி தம் ராமமமேயஸத்வம்* என்பதாம்.

## — ஆளவந்தார்வைபவத் தொடர்ச்சி —

குருகைகாவலப்பனிடத்திலே யோகரஹஸ்யம் பெறக்கடவீர்' என்று மணக்கால் நம்பி முன்பு நியமித்திருந்ததை நினைத்த ஆளவந்தார், அப்பன் யோகத்திலேயெழுந்தருளியிருக்குமிடமான கங்கைகொண்ட சோழபுரத்தேறச்செல்ல, அப்பனும் அங்கே ஒரு குட்டிச் சுவரிலே யோக நிரதராய் எழுந்தருளியிருக்க, அப்போது அவர்க்கு ஸமாதிபங்கம் பண்ணவொண்ணாதென்றெண்ணிய ஆளவந்தார் அந்தச் சுவர்க்கு இப்பால் நிற்க, யோகநிஷ்டரான அப்பனும் திரும்பிப்பார்த்து 'இங்குச் சொட்டைக்குலத்தார் ஆரேனும் வந்தாருண்டோ?' என்று கேட்க, 'உடனே ஆளவந்தார், அடியேன்! என்று எதிரே சென்று தெண்டன் ஸமர்ப்பித்து 'அடியேன் இங்கு விடைகொண்டது தேவரீருக்குத் தெரியாதபடி பின்னே நிற்க, தேவரீர் அறிந்தது எங்ஙனே?' என்று கேட்க, அதற்குக் குருகைகாவலப்பனருளிச்செய்த வார்த்தை;—எம்பெருமானும் நானுமாக அநுபவித்துக்கொண்டிருந்தால் பெரிய பிராட்டியார் திருமுலைத் தடத்தாலே நெருக்கியணைத்தாலும் அவளது முகத்தையும் பாராத ஸர்வேச்வரன் என் கழுத்தையமுக்கி நாலு மூன்றுதரம் நீரிருந்த பக்கமாக எட்டிப்பார்த்தான். அப்படி அவன் பார்க்கும்போது சொட்டைக் குலத்தார் ஆரேனும் வந்திருக்கவேணும் என்றிருந்தேன்காணும் என்றார். [ஸ்ரீமந் நாதமுனிகளின் குலம் சொட்டைக்குலமெனப்படும். ஆழ்வார் பக்கலில் எம்பெருமான் பண்ணியிருந்த விசேஷ கடாக்ஷம் அவர்க்குப் பிறகு ஸ்ரீமந் நாதமுனிகள் திருவம்சத்தில் பெருகத் தொடங்கிற்றென்பது இங்கு அறியத்தக்கது.]

அதுகேட்டு ஆளவந்தார் மிகவுகந்து 'அடியேனுக்கு இந்த யோகரஹஸ்யத்தை யருளிச்செய்யவேணும்' என்று அப்பன் ஸ்ரீபாதத்திலே விழுந்துகிடக்க, அவரும் அப்படியே செய்கிறோமென்று முடிபிடித்தெடுத்து "நம்முடைய சரீராவஸாநத்திலே சொல்லுகிறோம், வருகிற தைப் பூசத்தன்று அபிஜிந் முஹூர்த்தத்திலே

இதன் கருத்து யாதெனில்;—திருக்கோட்டியூர் நம்பி எடுத்துக்காட்டிய அடியேனுள்ளா னென்ற பாசுரம் திருவாய்மொழி எட்டாம் பத்தில் "கண்கள் சிவந்து" என்கிற திருவாய்மொழியில் இரண்டாம்பாட்டு; "கண்கள் சிவந்து" என்கிற பாட்டும் 'அடியேனுள்ளான் என்கிற இப்பாட்டும் எம்பெருமானுடைய ஸ்வரூபத்தை ப்ரதிபாதிக்குமவை. இவற்றுள் 'அடியேனுள்ளா' னென்ற பாட்டில் முதல் விசேஷணத்தினால் 'எம்பெருமான் ஜீவாத்மாவை அநுப்ரவேசித்திருக்கு மவன்' என்றருளிச்செய்யக் கருதிய ஆழ்வார் 'ஆத்மாவிலுள்ளான்' என்று சொல்லியிருக்க வேண்டும்; 'என்னுள்ளான்' என்றுவது சொல்லியிருக்கவேண்டும்; இப்படிச் சொல்லாமல் அடியேனுள்ளானென்று அடிமையையிட்டு ஆத்மாவை நிருபித்தமை தோற்ற அருளிச்செய்கையாலே, ஆத்மாவுக்கு ஜ்ஞாநாநந்தங்களிற் காட்டிலும் சேஷத்வமே ப்ரதாந நிருபகமென்றதாயிற்று. (இதன் விரிவை எனது நூல்களிற் காண்க.)

## ஆழ்வான் பௌராணிக கைங்கரியம் பெறுதல்

ஒருநாள் நடுப்பகலில் உச்சிவெய்யிலிலே எம்பெருமானார் தாமொருவராகத் திருவரங்கத்தமுதனாருடைய க்ருஹத்துக்கெழுந்தருள, அமுதனாரும் 'இது வென் இப்போது!' என்று விஸ்மயத்துடனே ஸேவித்துக் கேட்க, உடையவரும் "உம் முடைய [1] பௌரோஹித்யக்காணியை நமக்குத் தரவேணும்" என்ன, அமுதனார் மஹாப்ரஸாத மென்று உகந்து ஹிரண்யோதகதாரா பூர்வகமாக ஆழ்வானை உத்தேசித்து ஸமர்ப்பித்தார். அன்று தொடங்கி ஆழ்வானைப் பௌரோஹித்யத் துக்குக் கட்டளையிட்டு நித்தியம் நம்பெருமாள் ஸந்நிதியிலே புராணம் விண்ணப்பம் செய்யும்படியாக நியமித்தருளினார். இக்கைங்கரியம் இவரது திருக்குமாரரான பட்டர்பரம்பரையாக இன்றளவும் ஸந்ததியார்க்கு ப்ராப்தமாயிராநின்றது. [பட்டருடைய தனியனில் "ஸ்ரீரங்கேச புரோஹிதः" என்றதுங் காண்க.]

## ஓர் ஊமைபெற்ற பாக்கியத்தைக்கண்டு ஆழ்வான் வருந்தினது

உடையவர் ஒருநாள் ஓர் ஊமையை யழைத்து மடத்துக்குள்ளே நிறுத்தித் திருவாசற் கதவுகளை யடைத்து ஸம்ஜ்ஞையாலே தமது திருவடிகளைக் காட்டிக் கொடுக்க, அந்த ஊமையும் பாக்யவசத்தாலே 'இத்திருவடிகளே நமக்குத் தஞ்சம் என்றறிந்து அத்திருவடிகளைத் தனது தலைமேலணிந்து கிடக்க, ஆழ்வான் இதைக் கதவின் புரையாலே கண்டு ஐயோ! ஆழ்வானாகப் பிறந்து சாஸ்திரங்களைக் கற்றுக் கெட்டேனே! ஊமையாகப் பிறவாதொழிந்தேனே!' என்று முடிமேல் மோதிக் கொண்டு கதறினாரென்று ப்ரஸித்தம்.

---

1. பௌரோஹித்யமாவது—நம்பெருமாள் ஸந்நிதியில் புராணம் வாசித்த லாகிற கைங்கர்யம்; வேதவிண்ணப்பம், திருமஞ்சனக் கட்டியம் ஸேவித்தல் முதலியவைகளும் இதில் அடக்கம்.

## ஆழ்வானுடைய ஜீவகாருண்யம்

ஆழ்வான் ஒருநாள் ஓரிடத்தே வழிபோகாநிற்க, ஒரு ஸர்ப்பத்தால் பிடிக்கப்பட்ட தவளை கூக்குரலிடக்கேட்டு, 'இது ஆரறியக் கூப்பிடுகிறதோ!' என்று மோஹித்து விழுந்தருளினர்.

மற்றொருநாள் கார்யார்த்தமாக ஒரு தோட்டத்துக்கு எழுந்தருள, அங்கே அப்போதுதான் ஒருவன் ஒரு வாழைக்குருத்தை அறுத்துக்கொண்டுபோக, அதில் நின்றும் பால் பெருகாநிற்கக் கண்டு மூர்ச்சித்து விழுந்தார்.

பின்னுமொருநாள் திருக்காவேரியில் தண்ணீர்க்குடத்தை இடுப்பிலே எடுத்து வைப்பாரில்லாமல் வருந்திநின்ற ஒரு இளம்பெண்ணுக்குத் தண்ணீர்க்குட மெடுத்து வைத்து வழிநடத்தி யருளினர். இவைபோல்வன மற்றும்பல இதிஹாஸங்களும் ப்ரஸித்தம்.

## ஆழ்வானுடைய ஆத்மகுண பரிபூர்த்தி

அக்காலத்திலே அரசாண்டுவந்த சோழராஜன் வைஷ்ணவத்ரோஹியாகையாலே ஆங்காங்குள்ள விஷ்ணு ப்ரதிமைகளை யெடுத்து எறிந்துவிடவேணுமென்று முயன்றபோது அவனுக்கு இஷ்டரானவர்கள் "மந்த்ரபூர்வகமாகப் பிரதிஷ்டை செய்யப்பட்ட விஷ்ணு பிம்பங்களை அழியச்செய்தால் உனக்குப் பெருத்த தீங்கு விளையும்" என்று சொல்ல, அதுகேட்ட சோழன் 'அந்தப் பிரதிமைகளில் தெய்வ சக்தியை உத்வாஸநம்பண்ணி அழியச்செய்வோம்' என்று நிச்சயித்து ஒரு பாப்பனனுக்குப் பணங்காசு கொடுத்து 'நீ [1] அத்ருச்யாஞ்ஜந மிட்டுக்கொண்டு உத்வாஸநம் பண்ணு' என்று ஆஜ்ஞாபிக்க, அவனும் திவ்ய தேசங்களிலே சென்று அப்படியே அத்ருச்யாஞ்ஜந மிட்டுக்கொண்டு உத்வாஸநம் பண்ணி பகவத் விக்ரஹங்களைக் கடலிலே எடுத்தெறிகிற செய்தியை எம்பெருமானர் திருச்செவி சாத்தி 'நாம் நெடுநாளாக இத்திருவரங்கம் பெரியகோயிலை விடாதே நோக்கிக்கொண்டு போருகிறோம்; இவ்விடத்துக்கும் அழிவு வரும்படி ஆஸுரவர்க்கம் மேலிடாநின்றது; இனிமேல் செய்யவேண்டுவதென்ன?' என்று வியாகுலப்பட்டுப் பெரியநம்பியோடே சிந்தித்திருக்க, 'நான் பெருமாளுடைய திருவெல்லையிலே ஒரு பிரதக்ஷிணம் வரும்படியாக உம்முடைய சிஷ்யர்களில் ஒருவரை என்பின்னே அனுப்பவேணும்; என்பின்னே வாராநின்றால் 'ஒருவன்பின்னே போகிறோம்' என்று தன்னெஞ்சில் படாதே நிழல்போலே என்னைப் பின் செல்பவனாக இருக்கவேணும்; அப்படிப்பட்ட ஒரு சிஷ்யனைப் பார்த்தனுப்பும்' என்று பெரியநம்பி திருவாய்மலர்ந்தருள, இப்படிப்பட்ட ஆத்மகுண பரிபூர்ணரான சிஷ்யர் ஆழ்வானொருவரே என்பது உடையவர்க்கு நன்கு தெரிந்திருந்தும் இதனைப் பெரியநம்பி திருவாக்கினால் வெளியிடவேணு மென்றெண்ணிக்கொண்டு

---

1. அத்ருச்யாஞ்சனமாவது—தான் ஒருவர் கண்ணிலும் தென்படாதபடி தன்னை மறைக்கவல்லதொரு அஞ்சனம்.

நம்பியை நோக்கி 'இப்படிப்பட்ட சிஷ்யர் இவ்விடத்தில் இருப்பதாகத் தெரிய வில்லையே!' என்று சொல்லி நிற்க, 'நம் கூரத்தாழ்வானை அனுப்பலாகாதோ?' என்று நம்பி நியமித்தருள, அருகிலிருந்த ஆழ்வான் இதைக்கேட்டு "நம்பிகள் நம் ஸ்வரூபத்தி னுண்மையை இங்ஙனே யறிந்து பல சிஷ்யர்களின் முன்னே இப்படி அருளிச் செய்யும்படியான பாக்கியம் பெற்றேமே' என்று பெருமகிழ்ச்சி யடைந்து நம்பிகளின் திருவுள்ளப்படியே பிரதக்ஷிணத்திற்குப் பின்சென்றார். [இந்த இதிஹாஸம் திருவாய்மொழி ஏழாம்பத்தில் பத்தாந் திருவாய்மொழியில் ஐந்தாம் பாட்டில் "பலரடியார் முன்பருளிய" என்றவிடத்து ஈடுமுப்பத்தாறாயிரத்தில் காணத்தக்கது.] இப்படிப்பட்ட ஆத்மகுண பரிபூர்த்தி ஆழ்வானொருவர்க்கே அஸாதாரணமென்பது நிர்விவாதம்.

## ஆழ்வானுக்குத் திருக்குமாரர்கள் திருவவதரித்தல்

ஆழ்வான் தமது செல்வத்தை முற்றும் துறந்து எம்பெருமானார் திருவடிகளில் ஆச்ரயித்தது முதல் நாடோறும் உபாதாந காலத்திலே திருவரங்கத்தில் சில திருமாளிகைகளில் உஞ்சவ்ருத்தி செய்து அதுகொண்டு குடும்ப காரியத்தை நிர்வஹித்துக் கொண்டு ஒவ்வொரு நாளும் கிடைக்கிற உணவுப்பொருள்களில் மறுநாளைக்கென்று சிறிதும் சேஷப்படுத்தி வைத்துக்கொள்ளாமல் அன்றன்றைக்கு தேஹயாத்திரை நடத்தியருளுகையில் ஒருநாள் விடாப்பெருமழை பொழிந்ததனால் வெளியேபோய் உபாதாநம் செய்துவரக் கூடாமல் போக, அதனால் அன்றைக்கு வெறும் தீர்த்தமாத்திரத்தை உட்கொண்டு "கண்ணா நான்முகனைப் படைத்தானே காரணா கரியாய் அடியேன் நான், உண்ணாநாள் பசியாவதொன்றில்லை ஓவாதே நமோநாரணா வென்று, எண்ணா நாளுமிருக்கெசுச்சாமவேத நாண்மலர் கொண்டு உனபாதம் நண்ணாநாள், அவை தத்துறுமாகி லன்றெனக்கவை பட்டினி நாளே" என்கிறபடியே பட்டினி பாராட்டாமல் "உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணனெம்பெருமான்" என்றாப்போலே அருளிச் செயலநுஸந்தாநமே தாரகமாகக் கொண்டு வேறு உணவின்றியே இருந்திட, அன்றிரவு பெரியபெருமாள் அமுது செய்கிறபோது உண்டான திருச்சின்னவொலி கேட்டவளவில் இவரது தேவியாரான ஆண்டாள் பெருமாளைக் குறித்து 'உம்முடைய அடியவர் பட்டினியிருக்க. நீர் குலாவிக் குலாவி அமுதுசெய்தருளுகிறீரோ?' என்று நினைத்தவளவிலே ஸர்வஜ்ஞனான ரங்கநாதன் அந்த ஆண்டாள் நினைப்பைத் திருவுள்ளம்பற்றி உடனே தேவஸ்தாந கார்ய நிர்வாஹகரான உத்தமநம்பிக்கு அர்ச்சகமுகேந கட்டளையிட்டு அப்பொழுது தாம் அமுதுசெய்த அக்காரவடிசிலை ஸகல பரிஜந பரிவாரங்களுடன் அவரைக்கொண்டு ஆழ்வான் திருமாளிகைக்கு அனுப்பியருள இவரும் இதனையறிந்து பதறியெழுந்து எதிர்கொண்டு *யாம்பெறு சம்மானமென்று அதில் தமக்கும் தேவிக்குமாக இரண்டு திரளைகளை யெடுத்துக் கொண்டு உத்தமநம்பியை அனுப்பிவிட்டு பக்தவத்ஸலனான பகவானுடைய வரம்புகடந்த கருணைத் திறத்தை வியந்து அந்த அடிசிலில் ஒருபகுதியைத் தாம் அமுதுசெய்து மற்றதைத் தேவியாருக்குக் கொடுத்தருள, முன்பு தசரத சக்ரவர்த்திக்குப் புக்ரகாமேஷ்டியிற் கிடைத்த பாயஸத்தின் கூறுகளே ஸ்ரீராம லக்ஷ்மண

பரத சத்ருக்நர்களின் திருவவதாரத்துக்குக் காரணமானது போல இப்பொழுது இவர்க்கும் "ஸ்ரீபராசர பட்டர், ஸ்ரீவேதவ்யாஸ பட்டர்" என்ற இரண்டு திருக்குமாரர்கள் திருவவதரிப்பதற்கு இத்திரளைகளிரண்டுமே ஹேதுவாயின.

## ஆழ்வான் ராஜஸபைக்கு எழுந்தருளினது முதலான வரலாறுகள் கீழே ஸ்ரீராமாநுஜர் வைபவத்தில் காணத்தக்கன

## திருமாலிருஞ்சோலை யாத்திரை புறப்படுதல்

ராஜஸபையில் நேர்ந்த கஷ்டங்களுக்குப் பிறகு நம்பெருமாள் ஸந்நிதிக்கு விடைகொண்ட ஆழ்வான் பெரிய ஸ்ரீபலிபீடத்தருகே தெண்டன் ஸமர்ப்பித்துத் தம்முடைய அளவற்ற ஆர்த்தியை ஆவிஷ்கரித்து, 'பெரிய நம்பியை அங்கீகரித்தாப்போலே அடியேனையும் அங்கீகரித்தருளலாகாதா?" என்று திருவுள்ளம்நொந்து விண்ணப்பஞ்செய்து பின்பு உள்ளேபுகுந்து ஸேவிப்பதாக எழுந்தருள, 'ராமாநுஜ ஸம்பந்தமுடையாரொருவரும் உள்ளே புகுந்து ஸேவிக்கவொண்ணாது' என்று சோழன் கட்டளையிட்டு வைத்தபடி அவனது சேவகர்கள் ஸந்நிதி வாசலிலேநின்று ஆழ்வானை உள்ளே புகவொட்டாமல் தகைய, அங்குள்ளாரில் சிலர் 'இந்த ஐயங்கார் மற்றவர்களைப் போலல்லர்; இவர் ஆத்மகுணங்கள் நிரம்பியவர்; இவரைத்தடுக்காமல் புகுரவிடுங்கள்' என்றுசொல்ல; இவற்றைக்கேட்ட ஆழ்வான் திடுக்கிட்டு நடுங்கி நாலடி பின்வாங்கி "ஐயோ! எல்லார்க்குமுண்டான ஆத்ம குணம் ஆசார்யஸம்பந்தத்துக்கு ஹேதுவாயிருந்தது; அடியேனுக்குண்டான ஆத்ம குணம் ஆசார்ய ஸம்பந்தத்தை அறுத்துக் கொள்ளுகைக்கு ஹேதுவாய் விட்டதோ"[1] என வெறுத்துக்கொண்டு புறப்பட்டு "என்பேற்றுக்கு எம்பெருமானார் திருவடி ஸம்பந்தமே அமையும்; அந்த ஸம்பந்தத்தை யொழித்துப் பெருமாளை ஸேவிக்கவேண்டுவதில்லை" என்று உறுதிகொண்டு அன்றே கோயில் வாஸத்தை விட்டிட்டுத் திருமாலிருஞ்சோலையில் வாஸத்தை விரும்பிப் பயணகதியாகப் புறப்பட்டெழுந்தருளினர்.

## ஸ்தவங்கள் அருளிச்செய்தல்

வழியிடையே எழுந்தருளும்போது தம்முடைய மனத்துயரங்கள் நினைவுக்கு வாராதிருக்கும்படி எம்பெருமானுடைய ஸ்வரூப ரூப குண விபூதிகளை நினைந்து நெஞ்சு கனிந்திருக்கக் கருதி ஸ்ரீவைகுண்டஸ்தவம் அதிமாநுஷஸ்தவம் என்ற அற்புதமான இரண்டு ஸ்தோத்திரங்களை அருளிச்செய்துகொண்டே திருமாலிருஞ்சோலைக் கெழுந்தருளினர். இவற்றுள், ஸ்ரீ வைகுண்டஸ்தவம் நூறு ச்லோகங்கள் கொண்டது. ஆழ்வானருளிச்செய்த பஞ்சஸ்தவங்களில் இந்த ஸ்தவமே முதல

1. ராமாநுஜ ஸம்பந்திகளை உள்ளே புகவிடக்கூடாதென்கிற கட்டளையின்படி ஆழ்வானையும் விலக்க வேண்டியிருக்க, ராமாநுஜ ஸம்பந்தத்தை உபயோகமற்றதாக்கி இவருடைய ஆத்மகுண பூர்த்தியையே அவர்கள் மதித்தபடியால் அது இவர்க்கு அஸஹ்யமாயிற்று என்பது இங்கு உணரத்தக்கது.

தாம். இத்தால் பரவாஸுதேவனுடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளை விசதமாக அநுஸந்தித்து அநுபவித்து இங்ஙனே விபவாவதாரங்களையும் பேசி அநுபவிக்கத் திருவுள்ளம்பற்றி இரண்டாவதாக அதிமாநுஷஸ்தவ மருளிச்செய்தார். இதில் நரஸிம்ஹாதி அவதாரங்கள் சிலவற்றைச்சுருக்கமாகவும் ஸ்ரீராம க்ருஷ்ணாவதாரங் களைப் பெருக்கமாகவும் பேசி அநுபவித்தார். இதுவரையிலும் உலகத்தில் வெளி வந்துள்ள ஸம்ஸ்க்ருதவாங்மயங்களில் இவ்வதிமாநுஷஸ்தவத்திற்கீடான சொல் நோக்கும் பொருள்நோக்கும் தொடைநோக்கும் நடைநோக்கும் அமைந்த வேறொரு வாங்மயம் கண்டதில்லையென்று வித்வத்ரஸிக விவேகிகள் ஒருமிடறாக விளம்புவர்.

## அழகர் ஸந்நிதியிலே தம் குறையை விண்ணப்பஞ் செய்தல்

இங்ஙனே பரம போக்யமான இரண்டு ஸ்தவங்களை அருளிச்செய்து, அநந்தரம் திருமாலிருஞ் சோலையை அடைந்து அவ்விடத்திலே [1] "அடிவாரந் தன்னிலழகர் வடிவழகைப்பற்றி, முடியு மடியும் படிகலனும் முற்றுமனுபவித்தான் முன்" என்று மணவாளமாமுனிகளருளிச்செய்தபடியே சுந்தரத்தோளுடையானை ஆழ்வார் அநுபவித்தாப்போலே தாமும் அநுபவித்து அவ்வெம்பெருமான் விஷய மாக அமுதக்கடலென்னலாம்படியாய் நூற்றுமுப்பத்திரண்டு ச்லோகங்கள் கொண் டதான ஸுந்தரபாஹுஸ்தவ மருளிச்செய்து, அதன்முடிவிலே—

விஜ்ஞாபநாம் வநகிரீச்வர! ஸத்யரூபாம்
அங்கீகுருஷ்வ கருணார்ணவ! மாமகீநாம்,
ஸ்ரீரங்கதாமநி யதாபுரமேகதோஹம்
ராமாநுஜார்ய வசகঃ பரிவர்த்திஷீய !!

என்பது முதலான நான்கு ச்லோகங்களினால் திருவரங்கமாநகர் ஆஸுரப் பூண்டுக ளொழிந்து நிஷ்கண்டகமாக வேணுமென்றும் எம்பெருமானார் திருவடிகளின் நிழலிலே தாம் வாழப் பெறவேணுமென்றும் ஆர்த்தராய்ப் ப்ரார்த்தித்துக்கொண்டு சிலகாலம் அங்கே எழுந்தருளியிருந்தார். [பன்னிரண்டு ஸம்வத்ஸரமென்பர் பெரியோர்]

## மீண்டும் திருவரங்கம் பெரியகோயில் சேர்தல்

அவ்வளவிலே, அந்த மஹாபாதகியான சோழன் கழுத்திலே புண்ணாகிப் புழுத்து மாண்டானென்ற செய்தி கேள்விப்பட்டு ஆழ்வான் அழகர் ஸந்நிதியிலே விடைபெற்று மீண்டும் கோயிலேற எழுந்தருளினர்.

## மேனாட்டில் நின்றும் எம்பெருமானார் கோயிலுக்கெழுந்தருளி ஆழ்வானை உசாவுதல்

சோழனுடைய உபப்லவங்களுக்கு அஞ்சித் திருநாராயண புரத்திலெழுந் தருளியிருந்த எம்பெருமானார், கோயிலில் நின்றும் அங்குவந்த ஒரு ஸ்ரீவைஷ்ணவ ராலே—சோழராஜ ஸதஸ்ஸில் ஆழ்வானுக்கும் பெரியநம்பிக்கும் நேர்ந்த ஆபத்

1. திருவாய்மொழி நூற்றந்தாதி 21

தைக் கேள்விப்பட்டுச் சாலவும் திருவுள்ளம் நொந்து 'ஆழ்வானுகிலும் உயிர் வாழ்ந்திருக்கப் பெற்ருேமே!' என்று திருவுள்ளம் தேறி. அப்போது தம்மிடத்தில் கைங்கரியம் செய்துகொண்டிருந்த மாருென்றில்லா மாருதிச்சிறியாண்டானை 'மிகவும் விரைவாகக் கோயிலுக்குச் சென்று ஆழ்வானையும் ஆராய்ந்து அங்குள்ள விசேஷங்களையும் அறிந்துவாரும்' என்று நியமித்தருள, அவரும் மிக விரைந்து கோயிலுக்கு வந்து சோழன் புழுத்துமாண்ட வ்ருத்தாந்தமுட்பட எல்லாவற்றையும் ஆழ்வான் ஸந்நிதியிலே அறிந்துகொண்டு மீண்டு திருநாராயணபுரம்போய் எம்பெருமானுர் திருவடிகளிலே இவற்றை விண்ணப்பஞ்செய்ய, அதுகேட்டு அவர் பெருமகிழ்ச்சி கொண்டு உடனே அங்குநின்றும் புறப்பட்டு மிக விரைந்து கோயிலுக் கெழுந்தருளி முதலிகளும் தாமுமாக ஆழ்வான் திருமாளிகை யேற எழுந்தருள ஆழ்வானும் எதிரே யெழுந்தருளி உடையவர் திருவடிவாரத்திலே வேரற்ற மரம் போலே விழுந்து ஸேவித்துத் திருவடிகளைச் சிக்கெனப் பிடித்துக்கொண்டு கிடக்க, உடையவரும் ஆழ்வானை வாரியெடுத்தணைத்துக் கொண்டு சோகவேகத்தாலே ஒரு வார்த்தையும் அருளிச்செய்யமாட்டாமல் உள்ளெலாமுருகிக் குரல்தழுத்து விம்மல் பொருமலாய் "வாரீர் ஆழ்வான்! இந்த தரிசநத்துக்கு த்ருஷ்டி பூதரான உமக்கு இப்படி கண்போவதே, இது என்னுடைய துஷ்கர்ம பலமன்ருே?" என்றிப் படி பலவாருக அருளிச்செய்து ஆழ்வானைத் தேற்றியருளி அவரையுங்கூட அழைத்துக்கொண்டு மடமேயெழுந்தருளினுர்.

## ஆழ்வான் வரதராஜஸ்தவமருளிச் செய்தல்

மற்றைநாள் உடையவர், திருமாலிருஞ்சோலை யாத்திரையிலே அருளிச் செய்த மூன்று ஸ்தவங்களையும் கேட்டருளி மிகவும் திருவுள்ளமுவந்து ஆழ்வானை நோக்கி 'உம்முடைய இவ்வருளிச் செயல்களாலேயன்ருே நம்முடைய திருவரங்கச் செல்வம் களையற்று நாமும் இங்கு வாழ்ந்திருக்கப் பெற்ருேம்; இனி, பெருமாள் கோயிலில் பேரருளாளப்பெருமாள் வேண்டிற்றெல்லாந்தரும் கோதில்வள்ளலாக விளங்குகின்ருர்; நீர் அவர் விஷயமாக 'அடியேனுக்குக் கண் தந்தருளவேணும்' என்று ஒரு ஸ்தோத்திரம் விண்ணப்பஞ் செய்யும்' என்றருளிச்செய்ய; ஆழ்வானும் 'அடியேனுக்கு இக்கண்வேண்டா' என்ன; எம்பெருமானுரும் அப்படியன்று; பேரருளாளன் விஷயமாக ஒரு ஸ்தோத்திரம் சொல்லியே யாகவேணும் என்று பலகாலும் வற்புறுத்தி யருளிச்செய்ய ஆழ்வானும் ஆசார்ய நியமநத்தைச் சிரமேற் கொண்டு வரதராஜஸ்தவ மருளிச்செய்யத் தொடங்கி "நீலமேகநிபம் அஞ்ஜந புஞ்ஜச்யாமகுந்தளம் அநந்தசயம் த்வாம்=அப்ஜபாணி பதம் அம்புஜ நேத்ரம் நேத்ரஸாத் குரு கரீச! ஸதா மே" (23) என்கிற ச்லோகத்தளவு மருளிச்செய்து "எப்போதும் உன்னை ஸேவித்துக் களிப்பதற்குறுப்பான அப்ராக்ருத திவ்ய நேத்திரம் அடியேனுக்குத் தந்தருளவேணும்" என்று விஜ்ஞாபிக்க, அன்றிரவே ஆழ்வானுக்குப் பேரருளாளர் கனவிலே காட்சி தந்து 'நீர் வேண்டினபடியே தந்தோம்' என்றருளிச்செய்ய, ஆழ்வானும் உடனே மகிழ்ந்து எழுந்து நித்யகர் மாநுஷ்டானங்களை நிறைவேற்றி. தொடங்கின வரதராஜஸ்தவத்தையும் பூர்த்தி யாகத் தலைக்கட்டி உடையவர் ஸந்நிதியிலே முழுதும் விண்ணப்பஞ்செய்து காட்டி

வருகையில் மேற்குறித்த "நீலமேகநிபம்" என்கிற ச்லோகத்தை வாசிக்கக் கேட்டருளும்போது, 'வாரீர் ஆழ்வான்!' [1] இந்த ச்லோகத்தைக் கேட்டும் பேரருளாளன் உமக்குக் கண்தந்தருளா திருக்கமாட்டான்; கண்ணைக் காட்டும் பார்ப்போம்' என்றருளிச்செய்ய, ஆழ்வானும் அப்ராக்ருத திவ்யநேத்ரம் அருளினதாகக்கண்ட ஸ்வப்ந ஸமாசாரத்தை விண்ணப்பஞ்செய்ய, உடையவரும் "அப்படியன்று; நேரில் பெருமாள்கோயிலுக்குப் போய்ப் பேரருளாளனை ஸேவித்துப் பிரார்த்தித்து வருவோம் வாரும்" என்று சொல்லி ஆழ்வானை யழைத்துக்கொண்டு கச்சிக்குப் புறப்பட்டார்.

## ஆழ்வானுடைய அற்புதமான ஆத்மகுணம் கரிகிரியில் வெளிப்படுதல்

ஆழ்வானும் எம்பெருமானாரும் பயணகதியிலே கச்சித் திருப்பதி சேர்ந்து திருவத்திமா மலைக்கெழுந்தருளினபின், உடையவர் நியமநப்படியே ஆழ்வான் வரதராஜஸ்தவத்தைப பேரருளாளர் திருமுன்பே விண்ணப்பஞ்செய்து முடிக்கிற போது உடையவர் ப்ரதக்ஷிணமெழுந்தருளிப் பராக்காயிருக்க, பேரருளாளர் ஸ்தவம் திருச்செவிசாத்தி ப்ரஸந்நராய் 'உம்முடைய அபேக்ஷிதத்தை வேண்டிக் கொள்ளும்' என்ன; ஆழ்வான் உடையவர் திருவுள்ளப்படி கண் வேண்டிக்கொள்ளாமல் "நான் பெறும்பேறு நாலூரானும் பெறவேணும்" என்று வேண்டிக்கொண்டார். (இங்ஙனே வேண்டிக்கொள்ளவேண்டிய ப்ரஸக்தி யாதெனில்;) சோழ ராஜனை அடுத்திருந்த நாலூரானுடைய முயற்சியே ஆழ்வான் திருக்கண்களை யிழப்பதற்கும், பெரியநம்பி திருநாடலங்கரிப்பதற்கும், எம்பெருமானர் நாடுதுறந்து எழுந்தருள்வதற்கும் காரணமென்பது கீழ் விவரித்த வரலாற்றினால் விளங்குமே; ஆகவே அப்படி அஸஹ்யாபசாரிகளில் தலைவனான அந்த நாலூரானுக்குக் கொடிய நரகம் தவறாதென்று நிச்சயித்த ஆழ்வான் 'வைஷ்ணவ குலத்திலே பிறந்தானொருவன் இங்ஙனே படுகுழியில் விழலாகாது' என்று இரக்கமுற்று நம்மாலல்லது அவன் உய்வுபெற வழியில்லை என்றறுதியிட்டு, பரமத்ரோஹியான அவனுக்கும் நற்கதி வேண்டினார், த்ரோஹிகள் திறத்திலும் அன்புடைமை யென்னும் இச் சிறந்த திருக்குணம் ஆழ்வானொருவர்க்கே அஸாதாரணமென்பது விவாதமற்ற விஷயம்.

## உடையவரும் ஆழ்வானும் திருவரங்கம் மீளுதல்

பேரருளாளன் திருமுன்பே [2] "நான் பெறும்பேறு நாலூரானும் பெறவேணும்" என்று ஆழ்வான் பிரார்த்தித்ததைப் பேரருளாளன் அங்கீகரித்தருளி 'அப்படியே பெறக்கடவன்' என்று சோதிவாய்திறந்து பணித்தவளவிலே இதை எம்பெருமானார்

1. திருவாய்மொழியில் (4—7—5) "இப்பொழுதே வந்திடாயென்று ஏழையேன் நோக்குவனே" என்றவிடத்து ஈடு முப்பத்தாறுயிரப்படியில் இது காணத் தகும்.

2. எம்பெருமானாருடைய திருவடி ஸம்பந்தத்தால் தமக்கு நற்கதி நேருவது திண்ணமென்று துணிந்திருந்தாரென்க

கேட்டுப் பதறியோடிவந்து திருவுள்ளம் நொந்து பேரருளாளனை நோக்கி 'ஸர்வஜ்ஞரான தேவரீர் இப்போது என் நினைவைத் தலைக்கட்டியருள வில்லையே' என்றும், ஆழ்வானை நோக்கி 'நீர் ஸ்வதந்த்ரராய் என் நினைவைத் தலைக்கட்டாதே உபயோக மற்ற தொன்றை வேண்டிக்கொண்டீரே' என்றும் இருவரையும் வெறுத்துரைத்து 'இனி என் செய்வது!' என்று திகைத்து நிற்க; எம்பெருமானார் இங்ஙனே மனக் குறைப்பட்டுப் பரிதபிக்கும்படியை உணர்ந்த பேரருளாளன் 'நம் இராமாநுச ! ஆழ்வான் நம்மையும் உம்மையும் காணுமிடத்துக் கட்கண்ணாலே காணக்கடவன்' என்று வரமளித்தருள, ஆழ்வானும் பெருமானைத் தமது கட்கண்ணாலே கண்டு ஸேவித்து, சாத்தியிருந்த திருவாபரணங்களையும் திருப்பரியட்டங்களையும் திவ்ய மங்கள விக்ரஹ ஸந்நிவேசங்களையும் இவையிவையென்று குறித்துக்காட்டி உடையவர் திருமேனியையும் ஸேவித்துக்காட்ட, எம்பெருமானார் ஒருவாறு திருவுள்ளமுவந்து ஆழ்வானுடன் மீண்டு கோயிலேற எழுந்தருளினார்.

## திருவரங்கத்திலுள்ளார் ஆழ்வானது திருக்குணத்தை நோக்கி வியத்தல்

ஒருநாள் ஸ்ரீவைஷ்ணவர்களெல்லாரும் ஆழ்வானருகே வந்து "நாலூரான் தேவரீரளவன்றிக்கே நம் தர்சநத்துக்கே மஹாபராதியாயிருக்க, அவனை 'க்ஷிபாமி— ந க்ஷமாமி' என்னும்படியான கொடிய தண்டனைகட்கு ஆளாக்கவேண்டுவது அவசியமாயிருக்க, அப்பாலிக்குமுட்பட மோக்ஷமளிக்க வேணுமென்று பேரருளாளப் பெருமாள் ஸந்நிதியில் வேண்டிக்கொண்டதாமே, இஃது என்ன அநியாயம்!" என்று முறைப்பட, "அந்தோ! அப்படிப்பட்ட பாவிகளுக்கன்றோ இரங்கவேண்டுவது; மீனுக்குத் தண்ணீர் வார்த்துப் பயனென்?" என்று ஆழ்வான் பணிக்க, அது கேட்டவர்கள் இவருடைய பூததயாகுணத்துக்கு மிகவும் வியந்தனர். எம்பெருமானாரிடத்திலும் அவகாசம் பெறாத நற்குணங்கள் ஆழ்வானிடத்தே அழகாக அமைந்திருந்தனவென்று ப்ரஸித்தமாயிற்று.

## ஆழ்வான் பிள்ளைப்பிள்ளையாழ்வானுக்குப் பணித்த வார்த்தை

ஆழ்வானுடைய சிஷ்யர்கள் பலரிலே 'பிள்ளைப்பிள்ளையாழ்வான்' என்பாரொருவரிருந்தார்; அவர் நற்குல நற்செல்வம் முதலியவற்றாலே மேன்மைபெற்றிருந்ததால் சிறிது அஹங்காரங்கொண்டு பாகவதர்கள் திறத்திலே விநயமின்றிக்கே அபசாரப்பட்டுக்கொண்டே யிருக்கிறபடியை ஆழ்வான்கண்டு 'இவர்க்கு இந்த பாகவதாபசாரதோஷம் இவருடைய ஜ்ஞாநாநுஷ்டாநங்களெல்லாவற்றையும் கீழ்ப்படுத்தித் தானே மேலாகி விநாசபர்யந்தமாக்கிவிடும்; அதுக்கு 'வேலியிட்டு வைக்கவேணும், என்று திருவுள்ளம்பற்றி ஒரு புண்யதிநத்திலே நீராடின பின்பு இவரைப்பார்த்து, 'பிள்ளைப்பிள்ளாய்! புண்யகாலமென்று எல்லாரும் பூமிதாநம், ஸ்வர்ணதாநம், அந்நதாநம், வஸ்த்ரதாநம் என்றாற்போலே தாநங்கள் பண்ணநிற்கக்காண்கிறீரன்றோ; இக்காலத்திலே நீரும் நமக்கொரு தாநம் பண்ணமாட்டீரோ?' என்று கேட்க; 'அடியேன் எத்தை தாநம் பண்ணுவது? எல்லாம் ஏற்கெனவே ஸ்வாமியினுடையதேயன்றோ' என்று அவர் சொல்ல; அவ்வளவு போராது; மனமொழி மெய்களென்கிற முக்கரணங்களாலும் பாகவதாபசாரப்படாமல் இருக்கக்

கடவேன்' என்று நம் கையிலே தாரைவார்த்து தத்தம்பண்ணித் தரவேணும்' என்று ஆழ்வானருளிச்செய்ய; அப்படியே அவரும் உதகம் பண்ணிக்கொடுத்த பின்பு ஒருநாள் பூர்வவாஸனையாலே ஒரு பாகவதர் திறத்திலே மாநஸிகமாக அபசாரப்பட நேர்ந்துவிடவே, 'நாம் இனி முடிந்தோம்' என்று பயப்பட்டு அன்று ஆழ்வான் ஸந்நிதிக்கு விடை கொள்ளமாட்டாமல் தம் திருமாளிகையிலேயே மறைந்து வருந்திக்கிடக்க, இவர் வழக்கப்படி வருகிற காலத்தில் வரக் காணுமையாலே ஆழ்வான் இவர் திருமாளிகையிலே யெழுந்தருளி விசாரிக்கும்போது தாம் நெஞ்சிஞல் பாகவதாபசாரப்பட்டமையைக் கண்ணுங் கண்ணீருமாய் விண்ணப்பஞ் செய்து "மன மொழி மெய்களிலொன்றிஞலும் அபசாரம் விளையாதபடி இப்பொல்லா வழுக்குடம்புடனே யிருப்பது அரிதாயிருக்கின்றதே, என் செய்யக்கடவேன்?" என்று திருவடிகளைக் கட்டிக்கொண்டு கிடந்து க்லேசப்பட, 'இத்தனை அநுதாபம் இவர்க்கு உண்டாயிற்றே!' என்று ஆழ்வான் உகந்தருளி, "பிள்ளைப்பிள்ளாய்! நெஞ்சிஞல் நினைத்ததற்கு அநுதாபமுண்டாகவே எம்பெருமான் பொறுத்தருள்வன்; ப்ரத்யக்ஷத்தில் ராஜதண்டம் நேருமென்கிற அச்சத்திஞல் சரீரமூலமாக ஒருவரையும் நலியமாட்டீர்; ஆனபின்பு, மாநஸிகமும் காயிகமுமாகிற அபசாரங்களிரண்டையும் உமக்குக் கழித்துத் தந்தோம்; இனி, வாக்கை மாத்திரம் நன்ருகக் குறிக்கொண்டு ஸாவதாநராய் வர்த்திக்கக் கடவீர்" என்றருளிச்செய்தார்.

## ஆழ்வான் பட்டருக்கு ஆசாரியருமானது

எம்பெருமானின்னருளாலே ஆழ்வானுக்கு இரண்டு திருக்குமாரர்களவதரித்தமை கீழே சொல்லப்பட்டது. அத்திருக்குமாரர்களின் அவதாரத்தைக் கேள்விப்பட்ட ஸ்ரீபாஷ்யகாரர் பெருமகிழ்ச்சிகொண்டு பதினோராநாளிலே சிஷ்யவர்க்கத்துடன் ஆழ்வான் திருமாளிகைக்கு எழுந்தருளி, தமது பிரதான சிஷ்யர்களில் ஒருவரான எம்பாரை நோக்கி 'குழந்தைகளை எடுத்துக்கொண்டு வாரும்' என்ன; அவர் அங்ஙனமே ப்ரபந்நகுலக் கொழுந்தான அக்குழந்தைகளை எடுத்து வரும்போது த்ருஷ்டி தோஷாதிகள் தாங்காதபடி ரக்ஷையாக த்வயமென்னும் மந்த்ர ரத்நத்தை அநுஸந்தித்து வாழ்த்திக்கொண்டே வந்து குழந்தைகளை எம்பெருமானுர்க்குக் காட்டினர்; அவர் மிக்க களிப்புடனே ஆநந்தக்கண்ணீர் துளிக்கத் தம் திருக்கண்களால் குளிரக் கடாக்ஷிக்கும் போது அத்தெய்விக சிசுக்களின் தேஜோவிசேஷத்தைக்கண்டு வியப்புக்கொண்டு எம்பாரே! இக்குழந்தைகளிடம் த்வயம்பரிமளிக்கின்றதே! இங்ஙனம் ஆகுமாறு என்செய்தீர்?' என்று விஞவ, எம்பார், 'குழந்தைகட்குக் காப்பாக த்வயாநுஸந்தாநம் செய்துகொண்டு வந்தேன்' என்று சொல்ல, உடையவர் அப்படி எம்பார் காப்பிட்டதற்கு உகந்து அவரைப்பார்த்து இக்குழந்தைகள் உய்யும் வகையை நாடிச் செய்ததற்கு முற்பட்டீராதலால் இவர்கட்கு நீரே ஆசார்யராகக்கடவீர்' என்று நியமித்தருளிஞரென்றும், அப்படியே அத்திருக்குமாரர்கட்கு எம்பாரே ஆசார்ய க்ருத்யங்கள் செய்தருளிஞரென்றும், இதுபற்றியே எம்பெருமாஞர், எம்பார், பட்டர், நஞ்சீயர் என்றிப்படி ஆசார்ய பரம்பரை வருகிறதென்றும் ப்ரஸித்தமாயிருக்கும். இங்ஙனேயிருக்கச் செய்தேயும் ஆழ்வானுக்கும் ஆசார்ய பரம்பரையிலே அநுப்ரவேசம் உண்டாயிற்று. எங்ஙனேயென்னில்; ஆழ்வான்

திருக்குமாரர்கட்குத் திருவாய்மொழிப்பொருள் கற்பித்து வரும்போது, † "எண் பெருக்கந்நலத் தொண்பொருளீறில, வண்புகழ் நாரணன் திண்கழல் சேரே" என்கிற பாசுரத்தளவிலே வந்தவாறே அது திருமந்த்ரார்த்தத்தை விவரிக்கிற பாசுரமாகையாலும், மந்த்ரார்த்தம் ஆசார்யனிடத்திலேயே கேட்டறியவேண்டிய தாதலாலும் அதனை அவர்கட்குச் சொல்லாது நிறுத்தி 'இதனை உங்கள் ஆசார்யர் பக்கலிலே கேட்டுக்கொள்ளுங்கள்' என்று சொல்ல; அதனை விரைவில் அறிந்து கொள்ளவேணுமென்னும் அவாவினுல் உடனே அவர்கள் எழுந்து தம் ஆசாரிய ரான எம்பார் எழுந்தருளியிருக்குமிடத்தைக் குறித்துப் போகப்புக்கவளவில், ஆழ்வான் "மின்னின் நிலையிலமன்னுயிராக்கைகள்" என்கிறபடியே யாக்கை நிலையா மையைத் திருவுள்ளத்திற் கொண்டு அவர்களை யழைத்து 'இன்னபோது இன்னு ரிருப்பார் இன்னுர் போவாரென்று தெரியாது; ஆதலால் இருந்து கேளுங்கள்' என்று திருமந்திரத்தைச் சொல்லி இப்பாட்டின் பொருளையும் விவரித்து 'இப்பாசுரத்தைத் திருமந்திரத்தின் அர்த்தமாக நினைத்திருங்கள்' என்று பணித்தருளினமையால் திருக்குமாரர்க்கு ஆழ்வானும் ஒரு ஆசார்யராக அமைந்தருளினுர். பட்டர் ஸஹஸ்ரநாம பாஷ்யமருளிச்செய்யும்போது ஆசார்யவந்தநம் செய்கிற முதல் ச்லோகத்திலே "வந்தே கோவிந்த தாதௌ—எம்பாரையும் திருத்தகப்பனுரையும் தொழுகின்றேன்" என்றருளிச் செய்தது உபயஸம்பந்தமும் தமக்கு உண்டான படியைக் காட்டுதற்கேயாம்.

## "சிறுமாமனிசர்" என்னுமருளிச்செயற்கு ஆழ்வான் பொருள் விவரித்தது

பட்டர், சிறு பிராயத்திலே ஒருநாள் ஆழ்வான் திருவாய்மொழி அநுஸந் திக்கும்போது "உறுமோ பாவியேனுக்கு" (8—10—3) என்ற பாசுரத்தில் "சிறுமா மனிசராய் என்னை யாண்டாரிங்கேதிரியவே" என்றதைக் கேட்டு அதில் சிறுமா மனிசர் என்றதைக் குறித்து ஆக்ஷேபங்கொண்டு 'ஒன்றுக்கொன்று எதிர்த்தட் டான சிறுமை பெருமை என்கிற குணங்களிரண்டும் ஒரு பொருளினிடத்து ஒன்று சேர்ந்திருக்குமோ? ஆழ்வார் "சிறுமாமனிசர்" என்று இரண்டையும் ஒருவரிடத்தே சேர அருளிச்செய்தது பொருந்துவது எங்ஙனே?' என்று திருத்தந்தையாரை வினவினர். அதற்கு ஆழ்வான் ஆலோசித்து 'பிள்ளாய்! நன்கு வினவினுய்; உனக்கு உபநயநமாகாமையால் இப்போது வேதசாஸ்திரங்களைக் கொண்டு விடை சொல்லலாகாது; ஆகிலும் ப்ரத்யக்ஷத்திற் காட்டுகிறேம் காண்' என்று சொல்லிச் சில பெரியோர்களைக் காட்டி "திருமேனி சிறுத்து ஞானம் பெருத்திருக்கிற சிறியாச் சான் அருளாளப் பெருமாளெம்பெருமானுர் போல்வாரைச் சிறுமாமனிசர் என்னத் தட்டில்லையே; முதலியாண்டான், எம்பார் முதலிய பெரியோர்கள் உலகத்தாரோ டொக்க அந்நபாநாதிகள் கொள்வதோடு எம்பெருமான் பக்கல் ஈடுபடுவதிற் பரம பதத்து நித்ய ஸூரிகளைப் போலுமாதலால், இப்படிப்பட்டவர்கள் சிறுமாமனிசர் என்னத் தக்கவரன்றே? இங்ஙனமே வடிவு சிறுத்து மஹிமை பெருத்தவர்களும் மனிதரென்று பார்க்கும்போது சிறுமை தோன்றினும், பகவத்பக்தி ஞானம் அனுட்

† திருவாய்மொழி 1—2—10

டானம் முதலிய நற்குணங்களை நோக்குமளவில் நித்ய முக்தர்களினும் மேன்மை பெற்று விளங்குகிறவர்களுமான மஹாபுருஷர்களையே ஆழ்வார் சிறுமாமனிசரென்று குறித்தருளினர்' என்றருளிச்செய்ய அதுகேட்டுப் பட்டர் 'தகும் தகும்' என்று இசைவுகொண்டார்.

## ஆழ்வானுடைய குடும்பகாரியத்தை எம்பெருமானே நிர்வஹித்தது

திருக்குமாரர்களான பட்டரும் சீராமப்பிள்ளையும் ஸாங்கோபாங்கமாக வேத வேதாந்தங்களைப் பயின்று ஸகல வித்யாபாரங்கதர்களாகி விவாஹத்துக்கு உரிய பருவத்தை யடைந்தவளவிலே திருத்தாயாரான ஆண்டாள் ஆழ்வானைப்பார்த்து 'இவர்கட்கு விவாஹம் செய்விக்க வேண்டாவோ?' என்று விண்ணப்பஞ் செய்ய, அதுகேட்ட ஆழ்வான் அஹங்கார மமகாரங்கள் சிறிதுமில்லாத ஆசார்ய பரதந்த்ரராதலால், உடையவர் திருமுன்பே சென்று 'இவர்களுக்கு மணஞ்செய்விக்க வேண்டுமாமே' என்று விஜ்ஞாபிக்க, உடையவரும் தமது ஆசார்யராகிய பெரிய நம்பியின் உறவினர்களைக் குறிப்பிட்டு அவர்களிடத்து இவர்களுக்குப் பெண்கொண்டால் உசிதமாயிருக்குமென்று தெரிவிக்க, அக்கருத்தை மேற்கொண்டு ஆழ்வான் அவர்களிடத்திலே சென்று பெண் கேட்க, அவர்கள் கொடுப்பதாக முதலிற் சொல்லிப் பின்பு நூதந ஸம்பந்தமென்று இசையாதிருந்தார்கள். இப்படி சிலநாள் கழிந்தவளவிலே, பிள்ளைகளின் விவாஹத்தைக் குறித்து ஆண்டாள் ஆழ்வானை மீண்டுந் தூண்ட, அவர் 'ஈச்வர குடும்பத்துக்கு என்னை இருந்து கரையச் சொல்லுகிறுயோ? நாளைக்கு நான் பெருமாள் ஸந்நிதியிலே போனவாறே பிள்ளைகளை வரக் காட்டு' என்று சொல்லி, மற்றைநாள் திருவடி தொழப் போனபோது பிள்ளைகளும் வந்து நிற்க, பெருமாள் அருள்பாடிட்டு "ஆழ்வான்! ஒன்று சொல்லுவாய்போலேயிருந்தாயே, சொல்லிக்காண்" என்று நியமிக்க, "இப்புத்திரர்க்கு மணம்புரிவிக்க வேண்டுமென்று சொல்லுகிறுர்களே!" என்று ஆழ்வான் விண்ணப்பஞ் செய்தனர். பெருமாள் அதனை ஏற்றுக்கொண்டு 'அதற்கு உமக்கென்ன கவலை? நாமே தகுதியாகச் செய்விக்கிறேும்' என்று திருவுள்ளமாயருளி, பெண்கொடுக்கும்படி பெரிய நம்பி யுறவினர்க்கு ஸ்வப்நம் காட்டியருளினர். அங்ஙனம் பெருமாள் தாமே கனவில் எழுந்தருளி ஆழ்வான் குமாரர்களுக்குக் கன்னிகைகளைக் கொடுக்கும்படி கட்டளையிட்டதைக் குறித்து அவர்கள் மிக வியந்து அப்படியே இசைந்து மற்றை நாள் தாங்களாகவே ஆழ்வான்பக்கல் வலியவந்து பெண்கொடுக்கிறேுமென்று சொல்லித் தங்கள் குமாரிகளைப் பட்டர்க்கும் சீராமப்பிள்ளைக்கும் கன்னிகாதானஞ் செய்து வெகு சிறப்பாக விவாஹம் நடத்தினர். † இதனுல் ஆழ்வானுடைய குடும்ப காரியமும் எம்பெருமான் தலையிலே கிடந்ததென்பது விளங்கும்.

## அருளிச்செயல்களில் ஆழ்வானுடைய நிர்வாஹம்

நம் ஆசார்யர்களெல்லாரும் ஸகல சாஸ்த்ரங்களிலும் வல்லவர்களாயிருக்கச் செய்தேயும் ஆழ்வார்களுடைய ஈரச் சொற்களையேகொண்டு போதுபோக்குவர்கள்.

† திருவாய்மொழி (5—5—7) "நிறைந்தவன்பழி நங்குடிக்கு" என்ற பாட்டின் ஈடு முப்பத்தாறுயிரத்தில் இதன் சுருக்கம் காண்க.

ஸகல சாஸ்த்ரார்த்தங்களையும் அருளிச்செயல்களிலே நயிப்பித்து அநுபவிப்பர்கள். இப்படிப்பட்ட அநுபவம் ஆழ்வானுக்கு அதிகமாயிருக்கும். திவ்ய ப்ரபந்தங்களிற் பல பாசுரங்களிலே ஆழ்வானுடைய நிர்வாஹமென்று அருமையாகக் கொண்டாடப்படும் நிர்வாஹங்களுண்டு. விரிப்பிற் பெருகுமாதலால் ஒன்றிரண்டு காட்டுவோமிங்கு.

திருவாய்மொழியில் ஆழ்வார் நாயகிபாவனையுடன் பேசுகிற திருப்பதிகங்களில் "மாசறு சோதி" (5-3) என்பது மொன்று. அத்திருவாய்மொழியை ஆழ்வான் ஒருகால் ராஜேந்த்ர சோழனென்னுமிடத்திலே அற்புதமாக உபந்யஸிக்க நேர்ந்தபோது, அதில் ஏழாம் பாசுரத்தை உபந்யஸிக்குங் காலத்து "தலையில் வணங்கவுமாங்கொலோ தையலார் முன்பே" என்ற ஈற்றடியின் பொருளை விவரிக்குமளவில் 'ஆமருவி நிரைமேய்ந்தான் நம்பியார்' என்னும் பெயரையுடையராய் நூறுபிராயம் போந்திருப்பாரொரு பெரியவர் நடுங்க நடுங்க எழுந்திருந்து நின்று "ஸ்வாமிந்! நாயகி பாசுரமாகச் சொல்லுகிற இத்திருவாய்மொழியில் 'தலையில் வணங்கவுமாங்கொலோ' என்னச்கூடுமோ? தலைவி தலைவனைத் தலையால் வணங்குவதென்பதுண்டோ?" என்று கேட்க, "பிராட்டி திருவடியிடத்தில் ஸந்தேசம் சொல்லியனுப்பும்போது, "கௌஸல்யா லோகபர்த்தாரம் ஸுஷுவே யம் மநஸ்விநீ, தம் மமார்த்தே ஸுகம் ப்ருச்ச சிரஸா சாபிவாதய" என்று சொன்ன ஸ்ரீராமாயண ச்லோகத்தை யெடுத்து மிகவினிதாக உபந்யஸித்து "—மமார்த்தே... சிரஸாச அபிவாதய" [எனக்காக அவரைத் தலையால் வணங்கு] என்று பிராட்டி சொன்னது கண்டீரே" என்றருளிச்செய்ய, அப்பெரியவர் பெருமகிழ்ச்சி கொண்டார். நாலாயிர திவ்யப்ரபந்த வியாக்கியானங்களில் இங்ஙனே பல விஷயங்கள் காண்க.

## ஆழ்வானுடைய திவ்ய க்ரந்தங்கள்

திருமாலிருஞ்சோலை யாத்திரையில் அருளிச்செய்த மூன்று ஸ்தவங்களும், பிறகு எம்பெருமானார் நியமநத்தினாலருளிச்செய்த வரதராஜஸ்தவமும், அதன் பிறகு அருளிச்செய்த ஸ்ரீஸ்தவமும் ஆக "பஞ்ச ஸ்தவங்கள்" ஆழ்வானுடைய திவ்யஸூக்தியாக ப்ரஸித்தமாயிருக்கும். பட்டர் ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் "அவிஜ்ஞாதா" என்னும் திருநாமத்தை வியாக்கியானிக்குமிடத்து, *ஸர்வஜ்ஞதாம் ஏவமுபாலபாமஹே த்வம் ஹ்யஜ்ஞ ஏவாச்ரித தோஷஜோஷண:" என்கிற ச்லோகத்தை உதாஹரித்து, இது தம் திருத்தகப்பனாரருளிச் செய்ததாகவும் ப்ரஸாதித்திருப்பதை நோக்குங்கால் இந்த ச்லோகம் பஞ்சஸ்தவங்களுள் இல்லாமையாலே வேறு சில ஸ்தோத்ரங்களும் ஆழ்வானருளிச் செய்துளர் என்றறியலாகிறது.

வேதாந்தவாசிரியர் தமது ரஹஸ்யத்ரய ஸாரத்தில் சரமச்லோகாதிகாரத்திலே "பட்டரும் ஆழ்வானும் தந்தாங்களருளிச்செய்த நித்யங்களிலே' என்றிருக்கக் காண்கையாலே ஆழ்வான் நித்யக்ரந்தமு மொன்றருளிச்செய்திருப்பதாக விளங்குகின்றது. ஆனால் அது கிடைக்கப்பெற்றிலோம், இன்னமும் அவ்விடத்திலேயே "ஆழ்வானுடைய சரமச்லோக வ்யாக்யாநத்திலும் இவ்வளவே விவக்ஷிதமாகையால் ஒரு விரோதமுமில்லை" என்கிற பங்க்தியும் காண்கிறது இதனுல்

ஆழ்வான் சரம ச்லோக வ்யாக்க்யாநரூபமாக ஒரு க்ரந்த மருளிச்செய்தமை விளங்குகின்றது; இதுவும் கிடைக்கப் பெறுகின்றிலோம்.

யமகரத்நாகரம் என்கிற அற்புதமான ஒரு க்ரந்தம் ப்ரஸித்தமாகவுள்ளது. இது ஸ்ரீ க்ருஷ்ணாவதார சரித்திரங்களைப் பரக்கப் பேசுவதொரு யமகமயமான ஸம்ஸ்க்ருத காவ்யம். பதினாறு ஆச்வாஸங்களையுடையது; இது சிறந்த வியாக்கியானத்துடன் ஆந்த்ரலிபியில் முத்ரணமும் செய்யப் பெற்றிருக்கின்றது. இந்நூலின் அருமை பெருமைகளைப் பேசுதல் யார்க்கும் நிலமன்று. மூலமும் வியாக்கியானமும் ஆகவிரண்டும் ஆழ்வான் தாமே அருளிச்செய்ததாக அச்சிடப்பட்டிருக்கக் காண்கிறோம். "ப்ரணிபத்ய பரம புருஷம் ஸ்ரீவத்ஸாங்கஃ பராசராந்யாஹ்வஃ, ஸ்வயமேவ யமகரத்நாகர விவ்ருதிம் கர்த்துமாரபதே" என்கிற ஒரு ச்லோகமும் வியாக்கியானத் தொடக்கத்தில் காண்கிறது. பராசரரென்னும் மறுபெயருடைய வத்ஸாங்கர் இக்காவ்யத்திற்கும் வ்யாக்க்யானத்திற்கும் கர்த்தா என்று நன்கு விளங்குகின்றது. 'ஸ்ரீவதஸாங்கர்' என்கிற திருநாமம் ஆழ்வானுக்குத் தவிர மற்று யார்க்கேனும் இருந்ததாகக் கேள்வியில்லை; 'பராசரர்' என்கிற மறுபெயர் ஆழ்வானுக்கு இருந்ததாக ப்ரஸித்தி இல்லை இக்காவ்யத்தில் இரண்டாவது ஆச்வாஸத்தில் பதினைந்தாம் ச்லோகத்தின் வியாக்கியானத்தில்—எம்பெருமானா ரருளிச்செய்த ஸ்ரீபாஷ்யத்தில் தஹராதிகரணத்திலுள்ளதொரு வாக்கியத்தை அநுவதித்தெழுதி 'அதிற் சொன்னபொருள் எம்மால் சாரீரகத்தில் கண்டிக்கப்பட்டுள்ளது; கண்டநயுக்திகள் முதலியவற்றின் விரிவை அங்கே கண்டுகொள்வது' என்ற கருத்துப்படச் சில வாக்கியங்கள் காண்கின்றன அவற்றை நோக்குங்கால் இந்த க்ரந்தம் ஆழ்வானருளிச் செய்ததன்றென்று நிர்ணயிக்க நேருகின்றது. ஆனால், மேற்குறித்த வாக்கியங்களில் பிரபலமான அச்சுப்பிழைகளிருப்பதாகவே நாம் கொள்ளவேணும்; மேற்குறித்த வாக்கியங்கள் உண்மையாயின் இந்த க்ரந்தம் எம்பெருமானுர்க்கு ப்ரதிபக்ஷியான வொருவரால் இயற்றப்பட்டதாகவேணும்; அது சொல்லவொண்ணாது; க்ரந்தத் தொடக்கத்தில், ஆசார்ய நமஸ்கார ப்ரகரணத்தில் நம்மாழ்வார், ஆளவந்தார், எம்பெருமானார், ஆகிய மூவரையும் மூன்று ச்லோகங்களாலே ஆச்சரியமாகப் புகழ்ந்து பேசி வணங்கியிருப்பதால் எம்பெருமானார் திருவடிகளை ஆச்ரயித்து உய்ந்தவொருவரே இந்த க்ரந்தகர்த்தாவாக இருக்க உரியவர். எம்பெருமானார்க்குப் பிறகு வேறொரு ஆசார்யனைப் பற்றின ச்லோகமில்லாமையால் உடையவர்க்கு ஸாக்ஷாத் சிஷ்யரான ஒருவரே இயற்றியிருக்க வேணுமென்பது திண்ணம். க்ரந்தத்தின் சொற்சுவையையும் பொருட்சுவையையும் நோக்குங்கால் ஆழ்வான் தவிர வேறு யாரையும் நினைக்கவும் ப்ரஸக்தியில்லை. ஆகவே யமகரத்நாகரமும் அதன் வியாக்கியானமும் ஆழ்வான் ஸ்ரீஸூக்திகளே யென்று கொள்ளக் குறையில்லை யென்னலாம்.

கூரேச விஜயம் என்கிற ஒரு க்ரந்தம் ஆழ்வானருளிச்செய்ததாகச் சிலர் சொல்லுவதுண்டு; சோழராஜ ஸபையில் ஆழ்வான் உபந்யஸித்த பூர்வபக்ஷ ஸித்தாந்த கோடிக்ரமங்களைப் பின்புள்ளார் ஏடுபடுத்திக் கூரேச விஜயமென்று

திருநாமம் சாத்தினவளவேயன்றி இஃது ஆழ்வானருளிச்செயலன்று; ச்லோகங்களி லும் அநுபத்திகளுண்டு. இதைப்பற்றின விரிவை வல்லார்வாய்க் கேட்டுணர்க.

## ஆழ்வான் திருநாட்டுக்கு நியமநம் பெறுதல்

இங்ஙனே ஆழ்வான் லோகோஜ்ஜீவநங்களான ஸ்ரீஸூக்திகளை அருளிச் செய்துகொண்டு ஜ்ஞாநாநுஷ்டாநங்களாலே ஒப்புயர்வற்று விளங்கிவரும் நாளில், எம்பெருமானார் ஸந்நிதியிலே திருவாய்மொழி காலக்ஷேபம் நடந்துவருகிற அடை வில் (10—9) *சூழ்விசும் பணிமுகில் திருவாய் மொழியளவிலே வந்தவாறே, ''முடியுடைவானவர் முறை முறை எதிர்கொள்ள'' என்கிற பாசுரத்தில் 'பரமபதத் திலே முற்பட்டிருக்குமவர்கள் பிற்பட்டு எழுந்தருளுமவர்களை எதிர்கொண்டு உப சரிப்பர்கள்' என்று பரக்க அருளிச்செய்ததை உடனிருந்து கேட்ட ஆழ்வான், 'நாம் பரமபதம்போக உடையவர்க்குப் பிற்பட்டோமாகில் அவ்விடத்திலே உடை யவர் நம்மை எதிர்கொண்டு உபசரிக்கவேண்டும்படி நமக்கு மஹாபசாரம் விளையு மாதலால் பரமபதத்துக்கு நாம் முற்படவேணும்' என்று துணிவுகொண்டு எம்பெரு மானார் பக்கலிலே விண்ணப்பஞ் செய்யாமல் நம்பெருமாள்முன்பே போய் நிற்க, பெருமாளும் ஆழ்வானை நோக்கி ''ஏன்காணும் ஆழ்வான்! ஒன்று சொல்லிக் கொள்ள வந்தாற்போலே யிராநின்றீர்'' என்ன; ஆழ்வானும் ஒரு ச்லோகத்தை விண்ணப்பஞ்செய்து மிக உருக்கமாக உபந்யஸிக்க, பெருமாள் திருவுள்ளமுவந்து 'உமக்கு வேண்டிற்றெல்லாம் தருகிறோம், வேண்டிக்கொள்ளும்' என்ன; ஆழ் வானும் 'அடியேனுக்குப் பண்டே எல்லாம் தந்தருளிற்றே' என்ன; பெருமாளும் 'அப்படியன்று, இப்போதும் வேண்டிக்கொள்ளும்; நம் பெண்டுகளாணை, நம் இராமாநுசனாணை; தருகிறோம்' என்று நிர்ப்பந்திக்க, ஆழ்வானும் 'இந்த அழுக் குடம்பை விடுவித்து நித்யவிபூதியில் நித்யாநுபவத்தைத் தந்தருளவேணும்' என்று பிரார்த்திக்க, பெருமாளும் அதுகேட்டு 'அந்தோ! ஆழ்வானைப் பிரிய வேண்டிற்றே!' என்று மிகவும் வருந்தி 'இந்த வரமொழிய வேறு வரம் வேண்டிக் கொள்ளும்' என்ன; ஒன்றேயுரைப்பான் ஒரு சொல்லே சொல்லுவானென பெருமை யைப் பொய்யாக்கலாமோ? வேண்டினதைத் தருகிறேனென்றருளிச்செய்து வைத்து மீண்டு இங்ஙனே மறுக்கலாமோ? அடியேன் வேண்டினதையே தந்தருளவேணும்'' என்று ஆழ்வான் பிரார்த்திக்க, 'இனிச் செய்யலாவதில்லை' என்று துணிந்து ''உமக்கும் உம்முடைய திருநாமஞ் சொல்லுமவர்கட்கும் உம்முடைய ஸம்பந்தம் பெற்றவர்கட்கும் மேல்வீடு தந்தோம்'' என்று திருவாய்மலர்ந்தருளி, திருப்பரியட்ட மும் தளிகை ப்ரஸாதமும் பூந்தண்மாலைத் தண்டுழாயும் திருக்கைச் சிறப்பும் ப்ரஸா தித்து விடைகொடுத்தருளினர்.

## ஆழ்வான் திருநாட்டுக்கு நியமநம் பெற்றதை எம்பெருமானார் உணர்ந்து மகிழ்தலும் வருந்துதலும்

ஆழ்வான் இங்ஙனே திருநாட்டுக்கு வரம் பெற்றபடியை எம்பெருமானார் கேட்டருளி ''முன்பு நாம் திருக்கோட்டியூர் நம்பி ஸந்நிதியிலே ரஹஸ்யார்த்த

உபதேசம் பெற்றபோது 'இவ்வர்த்தத்தைப் பரமரஹஸ்யமாகப் பேணிக்கொண்டிரும்' என்று நம்பிகள் நியமித்தருளினபடிக்கு மாறாக அத்திருக்கோட்டியூரிலேயே தெற்காழ்வார் திருவோலக்கத்திலே அப்பொருளைப் பலருமறிய வெளியிட்டோமாகையால் ஆசார்யநியமநத்தை அதிக்கிரமித்ததற்குப் பலனாகிய நரகமே நமக்குப் ப்ராப்தமாகவுள்ளது; மோக்ஷம்பெற நமக்குவழியில்லை என்றிருந்தேன்; இப்போது 'ஆழ்வானோடு ஸம்பந்தமுடையார்க்கும் மேல்வீடுதந்தோ'' மென்று நம்பெருமாள் நியமித்தருளினமையால் இனி நமக்கு ஒரு குறையுமில்லை; நமக்கு ஆழ்வானோடே ஸம்பந்தமுண்டே'' என்று களித்துக் காஷாயத்தை ஆகாசத்திலே வீசியெறிந்து மகிழ்ச்சிக்குப் போக்குவிட்டார். இதனை அடியொற்றியே,

> "அர்வாஞ்சோ யத்பதஸரஸிஜ த்வந்த்வமாச்ரித்ய, பூர்வே
> மூர்த்நா யஸ்யாந்வய முபகதா தேசிகா முக்திமாபு:,
> ஸோயம் ராமாநுஜமுநிரபி ஸ்வீயமுக்திம் கரஸ்தாம்
> யத்ஸம்பந்தாத் அமநுத கதம் வர்ண்யதே கூரநாத:"

என்கிற ச்லோகம் பட்டர் திருவாக்கில் அவதரித்தது.

[இத்தால், நற்கதி நண்ணுதற்கு ஸதாசார்ய ஸம்பந்தம் போலே ஸச்சிஷ்ய ஸம்பந்தமும் உறுப்பாம் என்றதாயிற்று.]

இங்ஙனே தம்பேற்றை நினைத்துக் களித்த எம்பெருமானார் உலகுக்கு ஓருயிரான ஆழ்வானை இழந்து நாம் எங்ஙனே உயிர் வாழ்ந்திருப்பது?'' என்று மிகவும் திருவுள்ளம் நொந்து ஸ்ரீபாதத்து முதலிகளெல்லாரையும் கூட்டிக்கொண்டு ஆழ்வானிருந்த விடத்தேறச் சென்று 'என் செய்தீர்! என் செய்தீர்!! இப்படியும் எம்மைப் படுகொலை யடிக்கலாமோ? என்று கேட்க; ஆழ்வானும் பரமபதத்துக்குத் தாம் முற்படவேண்டிய காரணத்தை விண்ணப்பஞ்செய்ய, உடையவர் அதுகேட்டு "ந சாஸ்த்ரம் நைவச க்ரம: என்று அடைவுகெட்டிருக்கும் நித்யவிபூதியிலே நீர் அடைவு தேடுவதே! இப்படியும் ஒரு சேஷத்வ காஷ்டை யுண்டாவதே!'' என்று மிகவும் வியாகுலராய்க் கண்ணுங் கண்ணீருமாய் ஆழ்வானை யணைத்துக்கொண்டு விம்மல் பொருமலாய்த் திருவுள்ளமுடைகுலைப்பட்டு, "ஐயோ ஆழ்வான்! உயிர் நிலையான உம்மையிழந்து எங்ஙனே தரிப்பேன்; என்னையும் உடன்கொண்டு போகத் திருவுள்ளம்பற்றினீரில்லையே!, நம்மைவிட்டகன்றுபோக உமக்கு ருசிப்பதே; பரமபதநாதனும் அங்குள்ளாரும் என்ன நோன்பு நோற்றார்கொலோ!, இங்கு உறங்குகிற பெருமாளும் நாங்களும் என்ன பாபம் பண்ணினோமோ; "இச்சுவை தவிர யான்போய் இந்திரலோகமாளும், அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமாநகருளானே!'' என்ற பாசுரத்தையும் மறந்திட்டீரே! ஐயோ என்செய்தீர்!, இனி உம் திருவுள்ளம் கலங்கும்படி பல சொல்லிப் பயனென்? உம்முடைய பேற்றுக்கு நாம் விலக்கடியாகலாமோ? சுகமாக நித்யவிபூதியேற எழுந்தருளீர்'' என்றுசொல்லி, செவியிலே த்வயத்தை அருளிச்செய்ய; அருகிருந்த முதலிகளெல்லாரும் 'இப்போதாக இதுவென்?' என்று கேட்க; நீங்கள் அறியீர்களோ? ராஜகுமாரனுக்கு கற்பூர நிகரமில்லாவிடில் நாக்கு வறளுமாபோலே இவர்க்கு த்வயமில்லாதபோது

நெஞ்சு வறளும் என்றருளிச்செய்து ஆழ்வானுடைய திருமுதுகைத் தடவி அஞ்ஜலித்து விடைகொடுத்தருளினர்.

## ஆழ்வான் திருநாட்டுக்கெழுந்தருளல்

உடையவருடைய நியமனமும்பெற்ற ஆழ்வான் உடையவர் திருவடிகளிலே வேரற்ற மரம்போலே விழுந்துகிடக்க, உடையவரும் இரண்டு திருக்கைகளாலும் வாரியெடுக்க எழுந்திருந்து உடையவர் திருவடித் தாமரைகளைத் தம் திருக்கண்களிலும் திருமார்பிலும் ஒற்றிக்கொண்டு ஸ்ரீபாததீர்த்தமும் கொண்டு கைகூப்பி 'இனி மடமே எழுந்தருளவேணும்' என்று விண்ணப்பஞ்செய்து வடவாற்றங்கரையளவாக உடையவர் பின்னேசெல்ல, ஆழ்வான்! இனி நில்லும்' என்ன; தெண்டன் ஸமர்ப்பித்து மீண்டு ஆழ்வார் திருமாளிகைக்கு அருகிலிட்ட திருக்காவணத்தின் நடுவே எழுந்தருளியிருந்து (தேவியாரான) ஆண்டாளைப்பார்த்து 'என்ன நினைத்திருக்கிருய்' என்ன; ஆண்டாளும் 'தேவரீர் திருவுள்ளத்தைப் பின்செல்லுகையொழிய அடியேனுக்கு வேருெரு நினைவுண்டோ?' என்று திருவடிகளிலே தெண்டனிட்டு அஞ்ஜலித்து நிற்க, ஆழ்வானும் பட்டரையும் சீராமப்பிள்ளையையும் அழைத்தருளி 'பெருமாளும் நாச்சியாரும் எழுந்தருளியிருக்க உங்களுக்கு ஒருகுறையுமில்லை; நம்பெருமாள் பெற்று வளர்த்தாரென்று இறுமாந்திராதே எம்பெருமானர் திருவடிகளே சரணமென்றிருங்கள்; ஆண்டாள் முகம் கன்ருமல் நடவுங்கள்; பாகவத விஷயங்களிலே சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினுலும் அபசாரப்படாதே அவர்களை அநுவர்த்தித்துக்கொண்டு போருங்கள்' என்றருளிச்செய்து தம் திருவடிகளிலே விழுந்துகிடந்த பட்டரையும் சீராமப்பிள்ளையையுமெடுத்துத் திருக்கையாலே கண்ணநீரைத் துடைத்து 'நீங்கள் ப்ராக்ருத ஸம்பந்தத்தை நினைத்து வருந்தினீர்களாகில் உடையவர் திருவடி ஸம்பந்தத்தை தூஷித்தீர்களாவீர்; ஆத்ம ஸம்பந்தத்தை நினைத்து வருந்தினீர்களாகில் நம்முடைய ஒழிக்கவொழியாத உறவை அறிந்திலீர்களாவீர்' என்று அவர்களைத் தேற்றி, கோயிலுக்கு நேரே பிள்ளைப்பிள்ளையாழ்வான் மடியிலே திருமுடியையும் ஆண்டாள் மடியிலே திருவடிகளையும் வைத்துக்கொண்டு ஆழ்வார் ஆளவந்தாருடையவர் திருவடிகளைச் சிந்தனைசெய்துகொண்டு அன்றே திருநாட்டுக்கெழுந்தருளினர். பிறகு எம்பெருமானர் எழுந்தருளித் திருக்குமாரர்களைக் கொண்டு சரம கைங்கரியங்களைப் பெருக்க நடத்தியருளினர்.

## வைபவநிகமநம்

இங்ஙனே ஆழ்வான் திருநாட்டுக்கெழுந்தருளினராகிலும், மொழியைக் கடக்கும் பெரும்புகழாகிற திருமேனியோடும் அர்ச்சாவதாரத் திருமேனியோடும் இவ்விபூதியெங்கும் நிறைந்து விளங்குகின்ருராகையால் அன்றிழந்த நாமும் கண்கள் துஞ்சாதே கண்ணாரக் கண்டுகளிக்கும் பாக்கியமுடையோம்.

**கூரத்தாழ்வான் வைபவம் முற்றிற்று.**

# பட்டர் வைபவச் சுருக்கம்

நமது ஸம்ப்ரதாயத்தில் எம்பெருமானாருடைய பதவியிலே அபிஷிக்தராய் அவரினும் விஞ்சிய ஞான வைபவத்தையுடையரான பட்டர் என்னும் ஆசிரியருடைய வைபவக் கடலில் சில சிறு திவலைகளை ஈண்டு அனுபவிக்க விழிகின்றோம்.

இவ்வாசிரியர் கூரத்தாழ்வானுடைய திருக்குமாரர் என்றும் ஸ்ரீரங்கநாதனுடைய திருக்குமாரர் என்றும் வழங்கப்படுவர். ஆழ்வான் க்ருஹஸ்தாச்ரமத்திலெழுந்தருளியிருக்கச் செய்தேயும் ''விஹித விஷய நிவ்ருத்தி தன்னேற்றம்'' என்று ஸ்ரீவசநபூஷணத்தி லருளிச்செய்த கணக்கிலே விரக்தாக்ரேஸரராக எழுந்தருளியிருந்தனர். இவர் தமது செல்வத்தை முற்றும் துறந்து எம்பெருமானார் திருவடிகளில் ஆச்ரயித்தது முதல் நாடோறும் உபாதாந காலத்திலே ஸ்ரீரங்கத்தில் சில திருமாளிகைகளில் உஞ்சவ்ருத்தி செய்து, அதுகொண்டு குடும்ப காரியத்தை நிர்வஹித்துக்கொண்டு ஒவ்வொருநாளும் கிடைக்கிற உணவுப்பொருள்களில் மறுநாளைக்கென்று சிறிதும் சேஷப்படுத்தி வைத்துக்கொள்ளாமல் அன்றன்றைக்கே தேஹயாத்திரை நடத்தியருளுகையில் ஒருநாள் விடாப் பெருமழை பொழிந்ததனால் வெளியே போய் உபாதானம் செய்து வரக்கூடாமல் போக, அதனால் அன்றைக்கு வெறும் தீர்த்தத்தையே உட்கொண்டு அருளிச்செயலநுஸந்தாநமே தாரகமாகக் கொண்டு வேறு உணவின்றியே யிருந்திட, அன்றிரவு 'பெரியபெருமாள் அமுது செய்தருளுகின்றபோது உண்டான திருச்சின்ன வொலி கேட்டவளவில் இவரது தேவியாரான ஆண்டாள் பெருமாளைக்குறித்து, உம்முடைய அடியவர் பட்டினியிருக்க நீர் குலாவிக் குலாவி அமுதுசெய்தருளுகிறீரோ?' என்று நினைப்பிட்டவளவிலே ஸர்வஜ்ஞனை ஸ்ரீரங்கநாதன் அந்த ஆண்டாள் நினைப்பைத் திருவுள்ளம்பற்றி உடனே தேவஸ்தாந கார்ய நிர்வாஹகரான உத்தம நம்பிக்கு அர்ச்சகமுகேந கட்டளையிட்டு அப்பொழுது தாம் அமுது செய்த அக்காரவடிசிலை ஸகல பரிஜந பரிவாரங்களுடன் அவரைக் கொண்டு ஆழ்வான் திருமாளிகைக்கு அனுப்பியருள, ஆழ்வானும் இதனையறிந்து பதறியெழுந்து எதிர்கொண்டு மஹாப்ரஸாதமென்று அதில் தமக்கும் தமது தேவிக்குமாக இரண்டு திரளைகளை யெடுத்துக்கொண்டு உத்தமநம்பியை அனுப்பிவிட்டு பக்தவத்ஸலனை பகவானுடைய வரம்புகடந்த கருணைத்திறத்தை வியந்து அந்த அடிசிலில் ஒரு பகுதியைத் தாம் அமுதுசெய்து மற்றதைத் தேவியாருக்குக் கொடுத்தருள, முன்பு தசரத சக்ரவர்த்திக்குப் புத்ர காமேஷ்டியிற் கிடைத்த பாயஸத்தின் கூறுகளே ஸ்ரீராம லக்ஷ்மண பரத சத்ருக்நர்களின் திருவவதாரத்துக்குக் காரணமானதுபோல இப்பொழுது இவர்க்கும் இத்திரளைகளிரண்டுமே இரண்டு திருக்குமாரர்கள் திருவவதரிப்பதற்கு ஹேதுவாயின. முறையே இவர்களின் திருநாமம் ஸ்ரீ பராசரபட்டர், ஸ்ரீ வேதவ்யாஸ பட்டர் என்பனவாம்.

பராசர பட்டர் என்று திருநாமமாயினும் நமது ஸம்ப்ரதாய க்ரந்தங்களி லெங்கும் பட்டர் என்றே இவ்வாசிரியர் வழங்கப்படுவர் பட்டர் என்னும் வடசொல் வேதசாஸ்திரங்களை நன்கு கற்றுணர்ந்த வித்வானையும் ஸ்தோத்ரஞ் செய்யும் தொழிலுடையவனையும் சொல்லும்; ["பட்டாரக"] என்னும் சொல்லும் இத்திறத் ததே. 'விளையும் பயிர் முளையிலே' என்னுமாபோலே சிசுவாயிருந்த தன்மையி லேயே இவருடைய திறமையை நன்குணர்ந்த எம்பெருமானார் இவர்க்குப் பொருத்த மாக பட்டர் என்று திருநாமஞ் சாத்தினதும், அத்திருநாமத்திற்கு மிகப் பொருத்த மாகவே இவரும் ஸர்வஜ்ஞராய் விளங்கிப் புகழ்பெற்றதும் எம்பெருமானுடைய ஸத்ய ஸங்கல்பத்வத்தை ஸத்யமாக்கினபோலும்.

இங்ஙனமே நாமகரணம் செய்தருள்வதற்காக உடையவர் எம்பாருடன் ஆழ்வான் திருமாளிகைக் கெழுந்தருளிக் குழந்தைகளை எடுத்துக்கொண்டு வாரும் என்று எம்பார்க்கு நியமிக்க அவர் அங்ஙனமே ப்ரபந்தகுலக் கொழுந்தான அக் குழந்தைகளை எடுத்துக்கொண்டு வரும்போது த்ருஷ்டி தோஷாதிகள் தாங்காதபடி ரக்ஷையாக த்வயமென்னும் மந்த்ர ரத்நத்தை அநுஸந்தித்து வாழ்த்திக்கொண்டே வந்து குழந்தைகளை எம்பெருமானார்க்குக் காட்டினர்; அவர் மிக்க களிப்புடனே ஆனந்தக் கண்ணீர் துளிக்கத் தம் திருக்கண்களாற் குளிரக் கடாக்ஷிக்கும்போது அத் தெய்விக சிசுக்களின் தேஜோ விசேஷத்தைக் கண்டு வியப்புக் கொண்டு 'எம்பாரே! இக்குழந்தைகளிடம் த்வயம் பரிமளிக்கின்றதே, இங்ஙனம் ஆகுமாறு என்செய்தீர்?' என்று வினவ, எம்பார் 'குழந்தைகட்குக் காப்பாக த்வயாநுஸந்தாநம் செய்துகொண்டு வந்தேன்' என்ன; உடையவர் அப்படி எம்பார் காப்பிட்டதற்கு உகந்து அவரைப்பார்த்து 'இக்குழந்தைகள் உய்யும் வகையைநாடிச் செய்தற்கு முற்பட்டீராதலால் இவர்கட்கு நீரே ஆசார்யராகக் கடவீர்'' என்று நியமித்தருளினா ரென்றும், அப்படியே அத்திருக்குமாரர்கட்கு எம்பாரே ஆசார்யக்ருத்யங்கள் செய் தருளினாரென்றும், இதுபற்றியே, எம்பெருமானார் எம்பார் பட்டர் நஞ்ஜீயர் என்றிப் படி ஆசார்ய பரம்பரை வருகிறதென்றும் ப்ரஸித்தமாயிருக்கும். இங்ஙனேயிருக்கச் செய்தேயும் ஆழ்வானும் பட்டர்க்கு ஆசார்யராயினர். அது எங்ஙனே யென்னில்; ஆழ்வான், திருக்குமாரர்கட்குத் திருவாய்மொழிப் பொருள் கற்பித்து வரும்போது "எண் பெருக்கந் நலத்தொண் பொருளீறில, வண்புகழ் நாரணன், திண்கழல் சேரே" என்கிற பாசுரத்தளவிலே வந்தவாறே, அது திருமந்த்ரார்த்தத்தை விவரிக்கிற பாசுரமாகையினாலும், மந்த்ரார்த்தம் ஆசார்யரிடத்திலேயே கேட்டறியவேண்டிய தாதலாலும் அதனை அவர்கட்குச் சொல்லாது நிறுத்தி 'இதனை உங்கள் ஆசார்யர் பக்கலிலே கேட்டுக்கொள்ளுங்கள்' என்று சொல்ல, எழுந்து தம் ஆசாரியரான எம்பார் எழுந்தருளியிருக்குமிடத்தைக் குறித்துப் போகப் புக்கவளவில் ஆழ்வான் "மின்னின்னிலையில மன்னுயிராக்கைகள்'' என்கிறபடியே யாக்கை நிலையாமையைத் திருவுள்ளம்பற்றி அவர்களை யழைத்து 'இன்னபோது இன்னாரிருப்பார் இன்னார் போவாரென்று தெரியாது, ஆதலால் இருந்து கேளுங்கள்' என்று, திருமந்திரத்தைச் சொல்லி அப்பாசுரத்தின் பொருளையும் விவரித்து 'இப்பாசுரத்தைத் திருமந்திரத்தின் அர்த்தமாக நினைத்திருங்கள்' என்று பணித்தருளினமையால் திருக்குமாரர்க்கு

ஆழ்வானும் ஒரு ஆசார்யராக அமைந்தருளினர் என்று ஸம்பிரதாயம் வல்ல பெரியோர் கூறுவர். பட்டர் ஸஹஸ்ரநாம பாஷ்யம் அருளிச்செய்யும்போது ஆசார்ய வந்தநம் செய்கிற முதல்ச்லோகத்தில் "வந்தே கோவிந்ததாதௌ—எம்பாரையும் திருத்தகப்பனுரையும் தொழுகின்றேன்" என்றருளிச்செய்தது உபய ஸம்பந்தமும் தனக்கு உண்டானதுபற்றியேயாம். ஸ்ரீரங்கராஜ ஸ்தவத்திலும் இரண்டு ஆசிரியருக்கும் இரண்டு ச்லோகங்களைத் துதியாக இட்டருளினர்.

பட்டரை இளங்குழந்தைப் பருவத்திலேயே ஸ்ரீரங்கநாதன் தனது புத்திரனாக அங்கீகரித்துத் தன்னுடைய ஸந்நிதியிலே திருமணத்தூணினருகே தொட்டிலிடுவித்து ஸ்ரீ ரங்கநாச்சியாரும் தானுமாகச் சீராட்டி வளர்க்க, அங்ஙனம் வளர்கிற அக்குழந்தை தவழ்ந்து சென்று, பெருமாள் அமுதுசெய்வதற்குத் திருமுன்பே கொணர்ந்து ஸமர்ப்பிக்கப்படுகிற அடிசிலைக் கைகளால் அள்ளியளைந்து துழாவ, பெருமாள் அதுகண்டு உகந்தருளி, "அமிழ்தினும் ஆற்றவினிதே தம்மக்கள், சிறுகையளாவிய கூழ்" (குறள்) என்றபடி இந்த இன்னடிசிலை மிகவும் பிரியமாக அங்கீகரித்தருள்வராம். இப்படி ரங்கநாதன் தம்மை அபிமானித்துப் புத்ரஸ்வீகாரம் செய்தருளப் பெற்ற பாக்யமுடைமையால் பட்டர் ஸ்ரீரங்கநாத புத்ரர் என்றும் வழங்கப்பட்டு வந்தார். "வானிட்ட கீர்த்தி வளர் கூரத்தாழ்வான் மகிழவந்த, தேனிட்டதார் நம்பெருமாள் குமாரர் பட்டர்" என்று இவரது சிஷ்யரான பிள்ளைப் பெருமாளையங்கார் (திருவரங்கக் கலம்பகக் காப்புச் செய்யுட்களுள் ஒன்றில்) கூறினர், பட்டர் தாமும் ஸ்ரீ ரங்கராஜஸ்தவத்தில் பதினேழாம் சுலோகத்தில் "ஸ்ரீ ரங்கராஜ கமலாபதலாலிதத்வம்" என்ற பதத்தினால் இதனை ஸ்பஷ்டமாக்கியருளினதும் உணர்க.

இப்பேராசிரியர் ஸகலசாஸ்திரங்களிலும் அபாரமான பாண்டித்யம் பெற்றவர் என்பது இவர் அருளிச்செய்த க்ரந்தங்களுள் ஸஹஸ்ரநாம பாஷ்யம் ஒன்று கொண்டே உணரத் தக்கதாகும். இவர் கவித்திறமையில் ஒத்தாரும் மிக்காருமில்லாதவர் என்பது இவர் அருளிய ஸ்ரீ ரங்கராஜஸ்தவ ஸ்ரீ குணரத்ந கோசாதிகளால் நன்கு விளங்கும்.

அருளிச்செயல்களில் அற்புதமான விசேஷார்த்தங்களை அருளிச்செய்வதற்கு இவ்வாசிரியரே அநிதர ஸாதாரணமான வல்லமைபெற்றவர் என்பது திவ்யப்ரபந்த வியாக்கியானங்களில் பெரியவாச்சான் பிள்ளை முதலானோர் அடிக்கடி அருளிச்செய்யு மாற்றால் தெரிகின்றது. வியாக்கியானங்களில், 'என்று பட்டர் அருளிச்செய்வர்' எனவருமிடங்களிலெல்லாம் ஒரு விலக்ஷணமான ரஸாநுபவம் கல்நெஞ்சினர்க்கும் உண்டாவது வழக்கம். இவரது நிர்வாஹங்களில் ஒன்றை ஈண்டெடுத்துக் காட்டுவோம் —

திருநெடுந்தாண்டகத்தில் 'அறுகால சிறுவண்டே தொழுதேனுன்னை' என்ற பாசுரத்தில் வண்டுக்கு ஸ்வாபாவிகமான ஆறுகால்களுள்ளமையை எதற்காகச் சொல்லிற்று? என்று விமர்சிக்கப் புகுந்த சிலர், இரண்டு காலாகவும் நான்கு

